பரமபதிதுணை.

பலவித்வான்களா லியற்றப்பெற்ற

பெரிய

# வண்ணத்திரட்டு.

திருமங்கலம் வித்துவான் மகா-௱-௱-ஸ்ரீ

பரதசுந்தரபுராணிகர் அவர்கள்

குமாரர்

**எஸ். கிருஷ்ணசாமிபிள்ளையால்**

பார்வையிடப்பெற்று

மதுரை புதுமண்டபம் புக்ஷாப்

**எஸ். பொன்னையாபிள்ளையால்**

திருமங்கலம்

ஸ்ரீகிருஷ்ணவிலாஸ அச்சியந்திரசாலையில்

பதிப்பிக்கப்பெற்றது.

விலை 1915. அ ௩

உ

பரமபதி துணை.

பலவித்வான்களா லியற்றப்பெற்ற

# பெரிய

# வண்ணத்திரட்டு.

திருமங்கலம் வித்துவான் மகா-ா-ா-ஸ்ரீ

பாரதசுந்தர புராணிகர் அவர்கள்

குமாரர்

எஸ். கிருஷ்ணசாமிபிள்ளையால்

பார்வையிடப்பெற்று

மதுரை புதுமண்டபம் புக்ஷாப்

எஸ். பொன்னையாபிள்ளையால்

திருமங்கலம்

ஸ்ரீகிருஷ்ணவிலாஸ அச்சியந்திரசாலையிற்

பதிப்பிக்கப்பெற்றது.

1915.

சிவமயம்.



இஃது

திருமங்கலம்—வித்துவான்

மகா-ா-ா-ஸ்ரீ

பாரத சுந்தர புராணிகர் அவர்கள்

குமாரரும்

திருமங்கலம் ஸ்ரீ கிருஷ்ண விலாச அச்சியந்திரசாலைத்

தலைவருமான

# எஸ். கிருஷ்ணசாமி பிள்ளை அவர்கள்

மகிழ்ந்துரைத்த

அறுசீர்க் கழிநெடி லாசிரிய விருத்தம்.



பன்னூலிற் பெரும்பயிற்சி தெளிவறிவு மிக்கமைந்த பாவலோர்தம்
தொந்நூலை எழுத்தசைசீர் தளையடியிற் றம்மனம்போ லச்சிட்டார்
முந்நூல்போ லிந்நாளில் மதுரைஇமா கோபால கிருஷ்ணன்கண்டு
நந்நூலீ தெனவெவரு நயவிலையிற் கொள்கவென நல்கினானால்.





உ

பரமபதி துணை



## திருப்பூவணம்

# புஷ்பவனநாதர் வண்ணம்

இராகம்—நாதநாமக்கிரியை—ஆதிதாளம்

தானதத்த தத்ததத்த தானதத்த தத்ததத்த
தானதத்த தத்ததத்த தானதத்த தத்ததத்த
தனத்தன தந்ததன
தனத்தன தந்ததன
தனத்தன தந்ததன தனத்தன தந்ததன
தானதன தானதன தானதன தானதன
தானதன தானதன
தத்ததனதான தனதானதனன தனதானனு

காரணப்ர சித்தவஸ்து ஞானவித்து நித்தியக்ரு
பாசமுத்திர நிஷ்களப்பிர காசரத்தின வற்புதப்பொன்
மறைப்பொருள் நம்புமடி
யவர்க்கவர் சிந்தைமணி
விளக்குமெ யன்புதனில் முளைத்தெழு கின்றபரி
பூரணசு கோதயவி நோதநவ நீதவடி
வாகியம னோகரப்ப
ரப்ரமவிலாசர் ஆதிவிஷ்ணு

வுக்குமிக்க நான்முகத்த வற்குமுற்றெய் தாமலர்ப்ப
தத்தர்சித்த — ராகிமெச்சு — யுத்திபத்தி — மிகுத்தரு
ளும்பொன்னை மனைக்குளே
ழுந்தருளி நிறைப்பொ
னிறைந்ததிரு — வுருக்கொள — வன்றுரச — வாதவினை
யாடல்பணி — யேயுலகெ — லாமரிய — வேயிருக
போலமுந கக்குறிகொள்நாதர்
காதலுற்ற ளித்தநற்பி
தாவினத்தி யைக்குடத்தி லேயெடுத்து வைத்தருட்செய்
காசியைக்கு — றித்துளிச்சை — சிறக்கவ — ருந்தருமன்
மகிழ்ச்சிபொ ருந்தியதி
சயிக்கமெ ங்கமல
ரெனத்திக — ழும்படியி — ஞலிதுவ — லோபெரிய
காசியென — வேதுதிசெய் — தாடிவரு — போதினில
யிக்யமருளீசர் - மகமாயியழகிய - மின்மேவுவோர். ()

காதலித்து — நித்தமுற்ற — காசியிற்க — தித்தபுட்ப
கானகத்தி னிற்றரிக்கு மாணிடப்ப ரப்புமற்றை
யனைத்துயி ரும்பெரிய
கிருபைச்சிவ லிங்கவடி
வெனச்சொலி யன்பிஞெடு ப்ரதட்சணம் வந்தருண
சூரியனு மாமதியு மாசவெளி மீதுவழி
தான்விலகி யோடவருள்
வைத்துறுவிசேடர் பாதகத்தொ
ழிற்செய்தக்கன் வேள்வியிற்ற கப்பனடபி ஞலடுத்து
வட்டமிக்க பாவம்விட்டி டத்தலத்தில் மலர்த்தரு
வொன்றுகொடு பதித்துவி
ரும்பியுமை வளர்க்கவ
ளர்ந்தருளும் விருட்சம தன்கணவள் மாதபசு
மேதகவொ ராயிரம தாம்வருட நீடிவரு
தேவவரு டத்தில்முயல்போது
கார்கொள்கற்ப கத்தருக்க

னீமூலிற்கி ரிப்பெண்மெச்ச வேமுளைத்த கர்த்தர்செப்பு
மூவர்சொற்ற மிழ்த்துதிக்க விருப்பொடு வந்துவையை
மணற்சிவலிங்கமென மனத்தெணி
முன்புவட கரைக்கவர்
நின்றுதமிழ் பாடுபொழு தேயிடப மாமுதுகு
சாயும்வகை யேசெய்துமுன் மூவர்தெரி சிக்கமகிழ்நேசர்
நடராசர்கனக சபைபோலவே ()

நேரிருப்ப கத்தில்மிக்க கோள்கள்வக்கி ரிக்கவட்ட
மாநிலப்ப ரப்பினுக்குள் வான்மழைப் பிறப்பதற்கு
விடப்பனி ரண்டெனும்வ
ருடக்கன பஞ்சமுனம்
வரத்தனை யின்பயிர்க விறக்கவொர் பண்பலரி
வேரதனி லோர்தவளை வாழ்வத னுலதுப
டாதுநெடு நாள்வரைய
தற்கதுறவாகி வாசமிக்கொர்
புட்பசித்த மேவவிச்சை வைத்தெடுத்து வான்மதிச்ச
டைக்குள்வைக்க வேமிகப்ரி யத்தொடத்த வளைக்கருள்
கொண்டசுரர் குலத்தில்வி
ளங்கவரம் அளித்துமு
குந்தன்முதல் வெருக்கொள்ச லந்தரன்ம காவசுர
னுகவொரு நாமமியல் பாவருள வேயவன்ம
சாகருவ முற்றுவெகுதேவர்
நீர்மையைப் பகைத்தழித்து
மால்வெளிக்கி ரிப்புரத்தில் மேவமெத்த விர்த்தவிப்ரர்
போலவுற்றொர் சக்கரத்தின் உருப்புவி யின்கணெதிர்
கிழித்ததை யென்றலையில்
எடுத்துவை யென்றுசொலி
எதிர்த்தச லந்தரன தாகமிரு கூறுசெய்து
மாமலர்மு னியுமத னுரிய பூவைநகர்
முத்தியருளீசர் நடராசனுடைய கரிசாடுவோர் ()

நீடொளிப்ப கற்குநித்த மாழியொற்றை யிட்டிசைத்த
தேரிழுத்தி ழுத்திளைத்து வாவுபச்சை மெய்ப்பரிக்கு
வருத்தமி சைந்தவெகு
தவிப்பொழி கின்றபடி
செழிப்பின் வளர்ந்துநிழல் கொடுத்தப சுந்தழைகள்
சோலையிடை யேகவிகள் பாயிபொழு தேறுகனி
யூறிரத மோடிவய
லிற்பெருகிநாளு மீறுநெற்க
திர்க்குள்முத்து மூருநத்தி னத்தின்முத்தும் நீரினிற்கு
ளிக்குமைக்க ணுரிதழ்க்க ணிக்குள்முத்து மிகப்ரபை
கொண்டுமதி நிகர்ப்பது
கண்டுதிகழ் பகற்பொழு
துங்குமுத மலர்ப்பொலி யுங்கனத டாகமதி
லேபுகுநல் மேதியது பால்மடியில் வாளைநெடு
வால்களடி பட்டிடவநேரம்
நீள்தனச்சு ரப்புமிக்க
பீர்விடக்க தித்தபுஷ்ப வாவியைப்பெ ருக்கமெச்சு
பாலினற்ச முத்ரமொக்கு மகத்வமி குந்துசிவ
தலத்தினில் முந்துதல
மெனச்சொலி நின்றுமகிழ்
சகத்தினில் வந்தசிவ லோகமிதுவே யெனமெய்
நான்மறைசொல் பூவைவள மாநகரில் மேவிவளர்
புஷ்பவனநாதர் மதிமேவுபொதியவரைமீதிலே (௨)

மேருவெற்ப டுத்தசத்த சாகரப்ப ரப்பிலுற்ற
பூதலத்தி லிப்படிப்பெ ணேதுசொர்க்க முற்றிருக்கும்
ரதிப்பெணி லிந்த்ரன்மகள்
துரைப்பெணி லந்தவுரு
வசிப்பெணில் ரம்பையெனு நயப்பெணில் வஞ்சியிவள்
தானொருபெ ணுகுமதி ரூபமும்வை போகமும்வி
னோதமுமெய் தானெனநி
னைத்தபொழுதேமி னார்பதத்தை

யிப்புவிக்குள் மீதுவைத்த லட்சணத்தி ஞனிலத்து
தித்தமெய்ப்பெ ணுமெனத்தி ரப்படுத்தி யடுத்திட
நின்றெனது தவப்பல
னுங்கலையெ னிடத்தினி
லிங்குவர விடுத்தது வந்துகையி லாகுதர
வோதன மோபெரிய நூலினிடை நோகுமினி
நீர்நிலையி னிற்கிறதொணுது
மீறிவட்ட மிட்டசெப்பி
ஞேடெதிர்த்த திக்ரமித்த ஆனமத்த கத்தையொத்த
மார்புனிற்பு டைத்தநித்த பறம்புக்கொரு கும்பிடுமை
விழிக்கொரு கும்பிடுபொ
னடிக்கொரு கும்பிடுபு
னகைக்கொரு கும்பிடது போடுவது பாருமொரு
வாசகமெ ஞேடுரைசெய் தாலுமதில் வாயிலுள
முத்துதிரு மோசொல்
எனும்வேளைமுறு வல்விளையாடினுள் ()

மேவுதற்கு வைத்தபட்ச மீதெனக்கு றிப்புணர்த்தி
ஞரெனக்க ருத்தில்வைத்த நேரமெச்ச வெச்சரிக்கை
சொலச்சொல வென்கையது
பிடித்துந டந்துவெகு
மகிழ்ச்சிய டைந்துமலர் பரப்பிய மஞ்சமிசை
யேறியொயி லாயொருகு மீதுமயல் சாய்பொழுது
தாவுபனி நீர்மெய்குளி
ரக்குளிரவீசி மேகமொத்த
மைக்குழற்கை யால்வகுப்பெ டுத்துவைக்கு மாலையைத்த
ரித்துமிக்க பாகுவெற்றி லைச்சுருட்கள் கொடுத்திட
மென்றுகவு ளொதுக்கிய
தம்பலமு மெனக்கவ
டந்துசரி சனத்தொடு சிந்தியதெ லாமுனது
மீதிலட சாமியிது வேளையினி நீமருவ
வாவெனவு ரைப்பள்குசமூடு
மேல்ரவிக்கை யைக்கைதொட்டு

நாளெகிழ்த்த மட்டினிற்கு பீரெனக்க தித்தபச்சை
வாடையட்ட திக்குமுட்டி மணத்திடும் விந்தையது
சொலச்சர சங்கவிசை
மிகுத்தப தங்கள்வெகு
கலித்துறை சிந்துபல தாழிசைகள் தாயின்மக
ளேசல்மடல் கோவைவண மேசொலுவள் கூவுகுயி
லுக்குநிகராகி அநுரா
கமதனரா திபோலவே ()

வாரணத்தனத்தைவைத்தென் மார்பினிற்பதித்திருக்கி
வாள்விழிப்பகட்டின்மெய்க்குளாவியைப்பறிப்பள்கட்டி
நெருக்குவள் செங்கைகொடு
செருக்குவ ளன்புசொலி
யுருக்குவ ளின்பமயல் பெருக்குவள் கொஞ்சிமடி
மேல்விழுவள் நீபுருஷ வேசைபரி யாசமல
டாநீசம டாவெனவ
டிக்கடிவிணை மாயுரைப்பள்
மெத்தமுத்து மோகனச்சி றுக்கிதிட்ட மாயொருக்க
ணித்துமிக்க கால்களைப்பி ணிப்பினிச்செ விதழ்க்கடி
யென்பளிரு துடைக்குணி
மிண்டுவளை ணிடுப்பின
கங்கள்பட வழுத்துவள் கும்பதன தான்விரலி
னொருடி நீபிடிவி டாமல்மயல் மீறுதட
டாவெனம யக்குவள்கிரீடி
மாரபொக்கி ஷத்தினுட்கை
போடமெச்சி னுக்கமிச்ச மாகிவெட்க முற்றுளத்தி
ணமக்க ணத்தில்விட்டு முடுக்குவள் வஞ்சிமலர்
முகத்தொரு சந்த்ரகலை
பிறக்கம லர்ந்துகரி
கரத்தைவி ரைந்துசெய டாவெனவு மேசெயவு
மேதமிகு பீரெனவு மேவுவள நேரமெனை
முத்தமிடு வாள்பின்
அதிமோகதாக மிக வாடுவாள் ()

வாலிபப்பெ ணிற்றுரைப்பெ ணோர்கணத்தி னிற்றியக்க
சோபமுற்றும் விட்டுவிட்டு மேல்கொளச்சொ லிக்கரைப்ப
ளணைக்குள ணைந்தபொழு
தரைக்குளி ருந்தமுகிழ்
விரித்திட வந்துதமி குமுக்குமெ னுங்குமிழி
மேல்வருப்ர வாகமென வாகிமிக வேகியிரு
காலிணையு ளோடுமறி
பட்டதுகிலாம லோடவப்பு
றத்தினுக்குண் மாமகிழ்ச்சி யைக்கருத்து ளேயடக்கி
வைத்துமைக்க ணுண்குயக்க ணைப்பசப்பி யிடுப்பு
மிகுந்துகடுகடுக்குது சந்துதுடை
வலிக்குதெ முந்திரென
வுறுக்குவள் வம்பிகன மோடிபணு வாள்பினுட
னேமருவி யோர்விசைச லாபமொடு காரியந
டத்துமுபசாரி வார்கடற்ச
கத்தினுக்கு ணீசமர்த்த
னுத்தரிக்க நானொருத்தி நற்பெணுக்கு னேசமர்த்தி
கெட்டிகெட்டி யெனச்சொலி யென்றனிரு கதுப்பினை
மென்றுமத மெழுப்புவள்
பின்புதன தனததன
வென்றுபரி லீலைபுரி வாளிவள்சை யோகசுக
மாரறிவர் கோபியர்க ளோடுபுணர் கிருஷ்ணரறிவார்முன்
மறவாதுவனிதையனுபோகமே.

முற்றிற்று.

---

## இராஜமன்னார்கோயிற்செண்டலங்காரப்

# பெருமாள் வண்ணம்.

---

இராகம்—புன்னாகவராளி.

தானனதந்தனா தனதானதந்தனா தன
தானதந்தன தானதந்தன
தானதந்தன தந்ததந்தான
தனதனதன்னனதன ...னா

வேலைநெடுந்திரையா கிய பாய்விரிந்ததிலே நிமி
ராயிரம்பட நாகபஞ்சணை
மீதுறங்கிய நன்பரந்தாமர்
சீர்பெறுபஞ்சவரே விய காரியஞ்சொலவே துரி
யோதனன்சபையூடுசென்றிரு
கால்வருந்தந டந்திடுதூதர்
வீறுசெயுங்கனகா சுர ஞவிபொன்றிடவே கையி
ஞலறைந்திடு தூணில்வந்தரி
யேறெனும்படிநின்றசங்க்ராமர்
இலகியபொன்ஞடைபுனேவார் ()

வீசுதடங்கையிலே சுட ராழிசங்குடையார் குரு
கூரில்நஞ்சட கோபர்முன்சொன
பாடலின்பமு கந்திடுங்காதர்
ராவணகும்பகஞ தியர் போய்மடிந்திடவே உயர்
ஞாலமுன்பிண மாய்நிறைந்தபி
ஞணிறங்கிநி மிர்ந்ததிண்சாபர்
மேதினியெங்கணுமோ ரடி யாலளந்தருள்வார் தனி
மூலமென்ருெரு காலியம்பிய
வாரணந்தனே யஞ்சலென்ருளும்
இணையெழுதவொண்ஞதவடிவார். ()

ஆலைநெஞ்சிலையா ளிக லாமிடுந்தெய்வமோ கினி
யாசிவந்தும காதவஞ்செய்த
பேர்மயங்கந டந்தசிங்காரர்
மார்புநிறைந்துகுலா வுது மூாயலங்கலிஞ ரொரு
காளிகன்பட மீதுநின்றுல
கேழுமஞ்சந டஞ்செயும்பாதர்
ஆதியோடந்தமிலா வெளி யாயகண்டிதமா யணு
வாகிநின்றுச ராசரம்பல
வாகியெங்குநி றைந்தபண்பாளர்
அனுபவமென்ஞவியணைவார். ()

ஆழிநெடும்புனலூ டுவ ரால்நிறைந்திடூ கத
மாரிசிந்திநி லாவிழுங்கிய
போதுகொண்டலின் மண்டலஞ்சாய
மோதுதல் பண்டொருநாள் நவ நீதமுண்டபிரான் நல
சோதைகண்டுதன் மோர்கடைந்திடு
கோல்கொடன்றடி யுந்துபண்பாகும்
ஆதிவிளங்குறுமால் பிர தானமங்கையில்வா ழலர்
மேலுஃமங்கைம ணளரெங்களை
யாளவந்தருள் செண்டலங்காரர்
அழகியமன்னர் தம்வரைவாய். ()

பாலைவனந்தனிலே ஒரு பாதகன்பிறகே மகள்
போலவிந்திர சாலமொ தவு
பாயமொன்றும றிந்திலன் பாவி
ஆர்செய்தவஞ்சனையோ வினை யால்விளைந்த தோவா அயல்
வீடுகண்டறி யாள்கலந் தன
ஞேடிணங்கவு டந்தையிங்கே
பாரமறிந்தவளோ சொல்பி ராயமொன்பதலோ மல
டாயிருந்தவெ னேழைகும்பியல்
நீலிவந்துபி றந்ததென்பாவம்
வெயிலெழுமந்நேரமெளிதோ. ()

பாதைசுடுஞ்சுடுமே மகள் பாதமென்படுமோ படு
பாதிமுந்திபில் மீதுநின்றவ
னேதியங்கிவி ழுந்திடும்பேசு
பூவையுமிங்குளதே கிளி தானுமங்கிலையே அலை
வாய்வரும்பொழு தோடிவந்துவி
டாய்தணிந்திட வென்சொலுங்கூகை
பாவைபிரிந்தனளே பழியே நினைந்தனளே கதை
யோகொடுங்கலி யோகுழந்தையி
லேவிளைந்தது நன்றுவெங்காமம்
அரிகரிபெண்ணைசைகொடிதே. ()

மாலையிலுஞ்சிறுகா லையு மூழ்கியன்புடனே தரை
மீதிலுண்டவ ளாயருந்தவ
மேபுரிந்திபி றந்தநன்பேறு
தாயைமறந்தனளே அய லாரைநம்பினளே மத
யானைபின்பிடி யானைகண்டக
ளுவியம்பின ளந்தியம்போது
வாழ்மனையொன்றினிலே கிளை யாளர்தங்கள்முனே கலி
யாணமுன்செய்தொ ராசைகண்டில
ளுலிரண்டிபி றந்ததுண்டோபெண்
ஒருமகளொன்றுதுபெறவே. ()

வாசல்கடந்தளவே வெகு தூரம்வந்தவள்போ னம
தூரி வந்தில மோவெனென்றறி
யாம ரின்றுபு லம்புமென்பேதை
காடுகள்வெந்ததிலே கம ராய்விரிந்திடுமே யதி
தூங்கிய மாசுணம்புரி
ோலவெந்துசு ருண்டவெங்கானில்
மாதுநடந்தனளே யென காரணந்தெய்வமே இனி
யாரைநொந்துப்ர யோசனந்தனி
யேகிடந்துபு லம்புமென்ப்ராணன்
விதியிதுகன்மானுபவமே. ()

முற்றிற்று.

---

திருவொற்றியூர்த்

# தியாகராசர் வண்ணம்.

தானதனந்தந் தனந்தத்தந் தனத்தத்தா தனத்தானன
தானதனந்தந் தனத்தத்த
தானதனதத்த தனதானதான
தனதானதான தனதானதான தனதானதான
தனதனதானன தனனதானன

சீருலவுந்திங் களுங்கட்டுங் கடுக்கைப் பூவுமிக்கானப
கீரதியுஞ்செஞ் சடைக்கற்றை மீதிலணிகர்த்தர் சிறுபாலன்மீது
பொருகாலனூர்மெய் சிதைவாகமோதி
யுதைவீசுபாதர் வானவர்நெஞ்சங்
கலங்கிச்சஞ் சலித்துக்கூ வுமப்போதையி லாலமுகந்துண்
டுயிர்ப்பிச்சை யீயுமொருசித்தர் வடவாலநீழ லடியார்கடேற
மறைகூறியாளு முபதேசநாதர்
தேடிவருந்துங் குழந்தைக்கன்
புவைத்துக்காய் பசிக்காகிப பாலலேபொங்குங் கடற்பட்ச
மாகியருளத்தர் தெளிவானசோதி யொளிதானருத திருநீறுமேவு
திருமேனியாளர் வடிவுடைநாயகி மருவுபாகனூர். ()

சேகரசந்த்ரன் குலுங்கக்கிண் கிணிக்கொத்தா டமுத்தாடவ
னேகவிதந்துந் துமிச்சத்த மாடலிசைபெற்ற செயதேவதேவ
செயலோகநாத வெனவேதகோடி
துதிபாடியாட வாசவனுங்கஞ்
சனுந்தைக்கும் படைச்சக்ரா யுதத்தோனொடு !வானவருந்தங்
கையிற்கொட்டி யாடவொருபக்க மலர்வாழ்கல்யாணி யயிராணிவாணி
வருசோபனூதி யுடனுடமேவுந்
தேர்முசுகுந்தன் பொருந்திக்கும்
பிடத்தப்பா மலிப்பூமியி லேழுவிடங்கந் தனிற்சுற்றி
யாடிமகிழிட்ட திருநீழல்மீது க்ருபையாகிவாழ்வு திறமானசேவை
தருமடலாளர் வரியரவாடிய நெடியபூணினூர் ()

நாரியர்கொஞ்சும் பெதும்பைச்சங் கிலிக்குக்கா தலித்தேமய
லாகிவருஞ்சுந் தரர்க்கொக்க வோதியவனுக்கு நலமார்கனுவி
னிடையேகொளாணை மகிழ்வாயிலேலகொ
ளெனவோதுபோது மூதுரையின்கொண்
டிடுஞ்சத்யம் புரட்டிப்போ னவர்க்கேவிழி நாள்சிலசென்றங்
களித்திட்ட சிலர்தமிழ்கற்ற முனிபார்வைகாண வுமையோடுகூடி
முதுசேவையியு மணவாளலீலர்
நாளுமுழங்கும் ப்ரசங்கச்செந்

தமிழ்க்குத்தா தரைப்போலொரு வேசிதரும்பெண் பிளேக்கிச்சை
பேசும்வசனத்தர் நறைமாலேசூடி மறைமாலேபாடி நகுமாலேயான
சிரமாலேயாளர் மழுமறிமானிலக வணிபாணியார். ()

நாகரிகந்தங் கரம்பைச்செம் பழத்தைத்தா ரொடித்தேவெடி
வாளேகளெங்கும் குதிக்கச்செய் சாலிமுடியிட்டு நடுமாதரார்க
ணிழலாடவாட நடைநீரிலோடு
கயலோடியாட வாசனேமண்டுஞ்
சுகந்தச்சண் பகத்துச்சோ லேயிற்கோகில மோகவசந்தன்
படைக்கொத்த காளமெனநித்தியம் வழுவாதுகூவ வழகாயெநாளு
மணமாறிடாத மணிமாடவீதி
நாமகளுஞ்சென் றுவந்திக்கும்
புதுபொற்று மறைப்போதுறை பூமகளுங்கொண் டிடப்பெற்ற
தூயதிருவொற்றி நகராளுமீசர் புகழ்சேருலாசர் நழுவாதநேசர்
தொழுத்தியாகராசர் மணிவரைமீதினி லிலகுமாதரீர். ()

மாரனெடுந்தண் டிறங்கிச்சண் டையிட்டக்கால் முதற்பாளேய
மாகிவரும்பெண் களிற்சித்திர மேதனிமைநிற்கும் வகையேதுவேறு
மிகையேதுகூறு மயிலேசொலாடு
குயிலேமண்மீது சூரிலவம்பஞ்
சினும்பொய்க்கும் பதத்தைத்தா முவைத்தீரது தானெனதங்கந்
தனேப்பிக்குமேயினி யுமக்கொர் துணேகாணுமானு மிணேகாணுமேனி
தொடவேணுமேசொ லிடவேணுநீரும்
வாருமிருங்கண் டுசந்திக்கும்
படிக்குந்தா னடுத்தீரொரு கோடிதவந்தந் திடத்தக்க
தோபரிமளிக்குமலர்வாயைநாடுமளிபோலநாடி வருமேழையென்மு
னமுதூறல்போல ஒருமொழியாகிலுமினிதுபேசுமே. ()

வாழையிளந்தண் டினுஞ்சட்டங் கொழித்துக்கா மனுக்காலய
தோரணசம்பங் களுக்கொப்ப தாகியதுடைக்குள் வளராதபோதெ
னுயிர்தேறுமோகொ லுலேவாயிலேறு
மெழுகாமிவேளே பாவியனங்கன்

செயுங்கொட்டந் தனித்துத்தா பரிப்பீரினி வேறொருதஞ்சம்
பெறப்பெற்றிலேனயன்வகுத்தபடிவாகியோவென் விழிவாகியோவு
முடல்வாகியோமெ லிடைபோனதேது
வாடிவணங்குந் துரும்புக்குஞ்
சிறுத்தைப்போமிடைக்கோவிரு பாரதனங்கொண் டசைப்பிக்கி நீர்நடை
நடக்கில் மலர்போலுமேனி குழைவாமையோவென் மடிமீதுவாரு
முகசேவைதாரும் இனியவர்பேரினில் வெகுளிவேணுமோ. ()

ஆரமுதின்செங் கரும்பைத்துண் டமிட்டுக்கோ துவிட்டாடிய
பாகமுதும்பின் குமட்டச்சொல் வீருரைகொடுக்கி லதுசேதமோவெ
னுடல்வாதமோவெ ளளவாகினலு
மிளகாததேது வாயுமிழுந்தம்
பலங்கற்கண் டதைச்சற்றே யளித்தால்வெகு நாளளவுந்தொண்
டுமக்குச்செய் வேனுமதுகிட்ட வரவோகைலாகு தரவோபணைச
மதியானவேலை யிடிலேதுமோச
மாரமணிந்தங் கதம்பச்சந்
தனத்தைப்பூ சிவைத்தால்தன யானைமதன்பின் பிடிக்கொட்டு
மோவதுபிடிக்க வடியேனிதோகை நகமார்குடாரியதுபோடவேணு
மிதமாகவேணும் இதுபொழுதே யதையறியலாகுமே. ()

ஆய்வளையுந்தொங் கலுங்கொப்பும் பதக்கச்சோ டுமுத்தாரமு
மேகலையுஞ்சங் கிலிக்கொத்து மாலையுமுனிட்ட வடையாளமாக
வுடனுடுமாத ரறியாமலேகை
புனைவேனலாது சோடுகிளம்பும்
பசும்பொற்குன் றினுக்கீ ழிடத்தேயொரு நாகதலங்கண்
டதனிற்கை யாடியொருமித்த சுகமார்புலோசை யிருநாலுமாட
விழிவேல்களாட வெழில்வேர்வையாட
வாகமிரண்டுங் குலுங்கப்பம்
பரத்தைப்போ லவொத்தாடிய கேளியிலென்றன் சமர்த்தைக்கை
பாருமனதுக்குளதன்மேலென்வேலைவெளியாகுநீருமதைநாடநாட
வெனைநாடுவீர்மெய் அதுவுமிலாவிடின் மடலையியுமே. (க)

மூற்றிற்று.

திருவையாற்றுச்

# செம்பொற்சோதியர் வண்ணம்.

இராகம்—புன்னுகவராளி—ஆதிதாளம்.

தனனதன தாத்ததந்த தனனதன தாத்ததந்த
தனனதன தாத்ததந்த தனனதன தாத்ததந்த
தந்தத்தா தனனதான
தந்தத்தா தனனதான
தந்தத்தா தனனதான தந்தத்தா தனனதான
தனனத்ததான தனதந்தன.

கடகரியின் பேற்பிறந்த இளமைபிரி யாக்குழந்தை
மதகளிறு போற்றவழ்ந்து மயில்முதுகில் வீற்றிருந்த
தண்டைக்கால் மடியிலேறு
மின்பத்தே னளிகளேறு
தும்பைப்பூ முடியிலேறு கொன்றைத்தார் புனையுமார்பர்
அமுதமொரு பாற்பிதுங்க நிலவுமொரு பார்பிதுங்க
விழிகளொரு பாற்பிதுங்க
மதியினுடல் தேய்த்தநம்பர்
கஞ்சத்தான் முதன்மையான பஞ்சைத்தேவதைகள்சேர
அஞ்சித்தா னுயிர்விடாமல் நஞ்சைத்தா னுகரும்வாயர்
கனியினெதிர் போய்த்துறந்து
குயிலையரு நாக்கரிந்து
கிளியையொரு மூக்கரிந்த மழலைமொழி வாய்க்கரும்பு
நம்பித்தா ளிணையின்மீது கும்பிட்டோர் தொலைவிலாத
சம்பத்தா லினிதுவாழ
அன்பைத்தா னுதவுதாயர்
அறம்வளர்த்ததாயரொருபங்கினர். ()

கலைமுனிவர் வீட்டில்வந்து கலசதன யார்க்கனங்க
கலகம்வெகு வாய்ப்பிறந்து கலைகள்பறி போய்த்துவண்டு

கொண்டைக்கார் சரியும்வேலே
கும்பஸ்தா பிதமதான
கொங்கைத்தா மரையைமூட அந்தப்போ தரையைமூட
நெடியபெரு மூச்சுவந்து தனத்தைவெளி யாக்கியங்க
முழுதும்வெளி யாக்கநின்று
முகிழ்முறுவல் பூத்தபெண்கள்
அந்திப்போ தனையமேனி சந்திப்போ தரிபடாது
பஞ்சிற்றீ யெனவுநாடு நெஞ்சிற்றீ யுடல்பொருது
கயல்பெருக ணீர்த்ததும்பி
இளகுஜத்தின் மேற்சொரிந்து
மலையருவி போற்பரந்து நதிபெருகு நீச்சில்வெண்ட
ரங்கச்சே லைகள்மின்னார்கள் தங்கட்கோர் கலைகளாக
அந்தக்கா னகமுலாவு
நம்பிட்சா டனவினோதர்
உலகிலொப்பிலாத வொளிதங்கினோர். ()

அடல்முரச மார்ப்படங்க விருதுகுயில் போய்ப்பதுங்க
நிழல்மதியி னாட்டொடுங்க வளர்கிளிகள் பேச்சொடுங்க
மன்றற்றே மலயமீது
தென்றற்றேர் பதறியோட
வம்புப்போர் புரியநாடும் அம்புப்போர் மலரிலேமுன்
விரைவிலொரு பூப்பறந்து வருமுன்விழி தீப்பறந்து
மதனனுடல் தூட்பறந்து
ரதிமனது போய்ப்பறிந்து
சந்தச்சே றளேயுமேனி மண்பட்டே புரளுநீர்மை
கண்பெற்றோர் தரிபடார்கள் பெண்பெற்றோர் பரிபடார்கள்
அதிரநெடு மூச்சிலண்ட
முகடுமொரு கிற்றுவிண்ட
தமரர்விழி தோற்றவெம்பி யழுதகுரல் கேட்டிறங்கி
வஞ்சிக்கா தரவுபேசி நெஞ்சுக்கோர் கவலைதீர
வஞ்சித்தோ னையுமெணுமல்
முன்செத்தோ னுயிரைமீள
அருள்கொடுக்கவோடிவருமன்பினோர். ()

அளிகள்பயில் தோப்பில்வந்த எருமைதன பாற்சுரந்து
மடுவினிடை பூத்தகஞ்ச மகளிர்குஜம் போல்குவிந்து
வண்டுக்கால் உழுதபோது
கெண்டித்தா ரைகளைநேர்சொல்
மண்டித்தேன் வழியநாரை கெண்டைக்கா யலையநீடு
கமுகினிடை பாக்குதிர்ந்து கதலிகுலை சீப்பொடிந்து
கிழிபடு பலாப்பழங்கள்
மிதிபடநி லாப்பரந்த
திங்கட்போல் ஒளிகுலாவு சங்கத்தே தரளராசி
சிந்திப்போய் நிலவுவீசு மிந்தக்கா விரிநனீரில்
அலைபெருகு மாற்றிலொன்று
நறைபெருகு மாற்றிலொன்று
அமுதநிறை யாற்றிலொன்று வருதிருவை யாற்றில்வந்த
செம்பொற்று மரைமினுளர் செம்பொற்று மரைகள்சூடு
செம்பொற்று ளிணையரான
செம்பொற்சோ தியரொனீசர்
முகிலுடுத்தசாரல்வரைவஞ்சியார். ()

படருமிரு தாட்சிலம்பு கலகலென ஆர்ப்பெழும்ப
வரிவளைகள் மேற்புலம்ப விழியிலொரு காட்சிதந்து
மஞ்சத்தே வருவர்நாணி
யந்தத்தூ ணருகுசாய்வர்
முந்திச்சே லையைவிடாம லென்கைக்கே தருமவேளை
எனதுமடி மேற்சரிந்து குழைவர்முடி பூச்சரங்கள்
புனைவரொரு பாக்கைமென்று
தருவர்சுருள் மாற்றிமென்ற
துஞ்சற்றே தருவர்கோவை யுஞ்சற்றே வெளுறரேகை
முன்சற்றே பதியுமாகி லென்கெட்டே னிதெனவூடல்
பயலும்வெகு தூர்த்தனென்பர்
அருகில்வர மாட்டமென்பர்
மிளகுபதம் வாய்க்குமுன்பு கடுகுபொடி யாச்சுதென்று
வந்தித்தே னென்னையெனுமல் நிந்தித்தார் மனதினொடு

புண்பட்டே னலதுபாவி
பண்பட்ட னிலையிதேது
குடிகெடுத்தகோபமதுகொஞ்சமோ. ()

பணைகுஜங்கள் பார்த்தகண்கள் பசியகுழல் பார்த்திருந்த
புலவியத றொற்றெளிந்து மனதிலுற வாய்க்கலந்து
முன்சற்றே முனியிலேது
பொன்சுட்டா றினதுபோல
வின்சொற்பே சினதுசீனி யுங்கைப்பாய் விடுமெனுணை
யமிர்தநிலை பார்த்தரிந்து நகதுனிகள் போய்ப்பதிந்த
சமயமொரு வேட்கைவந்து
தழுவியவர் சேர்த்தணைந்து
பந்தைப்போல் குஜமும்வாடை மஞ்சப்பூ சினதுவாச
மென்கத்தூ ரியமுமாமு டம்புக்கோர் புளகமாமெய்
பளபளென மேற்றுலங்கு
மரசிலையில் மேற்கிடந்த
புனைதுகிலை நீக்கவந்த பொழுதிலொரு கூச்சம்வந்து
செங்கைத்தா மரையில்மூடு தங்கக்கா சணையதோர்ப
ணஞ்சற்றே தெரியவேடி
ணங்கித்தா னினிதுமேவு
கலவிவித்தையாயிரம்விதங்களே. ()

உடல்புளக மாய்க்கலந்த திதுவுமொரு மார்க்கமம்பொ
னரவிலொரு கூத்துமெண்பு ளிசையிலொரு பாட்டுநங்கை
கொங்கைத்தா ளமும்விடாத
செங்கைத்தா டனமுமான
சங்கைக்கோ பரதலீலை மங்கைக்கோ சுரதலீலை
இதெனவிளை யாட்டணங்கி னருமையிள நீர்க்குலுங்கி
லொடியுமிடை சூட்சமென்று
குமுறுமிகு தாட்சதங்கை
கண்டத்தோர் தரளமாலை சுண்டைக்கா யளவுகாணும்
விண்டைப்பா லுதிரவோர்வை சிந்திற்றே வெனவும்நாடும்

உபயதன மேற்பதிந்த
இருகைமுடி மேற்குவிந்த
தொருகையதை நீக்கவந்தபொழுதில்மன தேக்கம்வந்து
மிஞ்சிப்பேசு ளதுபாதி யஞ்சிப்பேசு வதுபாதி
கெஞ்சிப்பே சுவதுபாதி
ரஞ்சிப்போ சொலவொணாது
கணைதொடுத்த மாரனெடுசண்டையே. ()

உடையுமயல் போய்ப்புரண்டு மொழிகள்விழி போர்புரண்டு
விழிகள்குழை மேற்புரண்டு முகமதியின் மேற்புரண்டு
பைம்பொற்றோ டசையநீடு
கம்பிக்கா தசையவோர்வி
தம்பத்தே ரசையமாலை யின்பொற்றோ துதிரவாச
மலரளக மேற்குலைந்து விரைவிலயல் போய்த்திரும்பி
மயில்விசிறி போற்குனிர்ந்து
வதனமதி வேர்ப்படங்க
அன்றிற்போ லிடைவிடாம லென்கைக்கே தனவிடாமல்
மின்கைக்கே யெனைவிடாம லின்பத்தே னிதழ்விடாமல்
ஒருவர்மலர் போற்கிடந்து
மொருவரளி போற்கிடந்து
தனமெழுகு போற்கரைந்து மதனசல முற்றிருந்து
முந்திப்போ கமுமலாது பிந்திப்போ கமுமலாது
சந்திப்பா கியசயோக
மெந்தக்கா லமுமறாமல்
எணையுருக்குமேகரசவின்பமே. ()

முற்றிற்று.

## திருவண்ணாமலையார் வண்ணம்.

இராகம்—புன்னாகவராளி.

தனத்தான தனனதன தனத்தான தனனதன
தனத்தான தனனதன தந்ததனன
தனனதன தான தான தனன.

சிலைக்காம னுடலெரிய விழித்தாடல் புரிபரமர்
செருக்கால நமதுயிரை
யுண்டசரணர் மலர்ப்பாவை
வருசகல கலைப்பாவை தொழுபசிய மலைப்பாவை
கவுரியொரு பங்கினுறைவார்
சினத்தானு மிகவுமெதிர்
விழித்தானு முனிவினொடு சிரித்தானும் அழல்வடிவு
கொண்டபரனர் அரவுகுடியேறுநீடுகுழையார். ()

திருக்கோயில் திருவதிகை திருச்சேய்ஞல் திருமகல்
திருத்தோணி திருவரதை
வஞ்சிபணையூர் திருச்சேறை
தருமபுர மறைக்காடு திருமயிலை திருக்கோவல்
தினைநகரம் அன்பில்கடவூர்
திருக்காவை பொதியமலை
கழிப்பாலை கயிலைமலை தெளிச்சேரி யிடைமருது
தஞ்சைவழுவூர் சுழியல்புனவாயில்கூடலுறைவார். ()

புலித்தோலி னுடையழகர் பனிக்கேகு நடையழகர்
பொடிப்பூசு முதலழகர்
செங்கைமழுவார் நெருப்பாரு
வரும்வழியில் மயிர்ப்பால மெனுமனதில் நினைப்பார்கள்
வினைகளையும் எங்கள்பரனர்
புயத்தோடு நெடியவரை
யெடுத்தானை வெகுளியொடு புடைத்தானை யுரியையணி
கொண்டதிறலார் குமுதமலர் மாலை சூடுசடையார். ()

புகைப்போல எழுபடல் முகிற்கூட மிடறிவிழு
பொழிற்கூடு வளர்கமுகு
நின்றநிலையே குருத்தோடு
மிடறொடிய முடத்தாழை விரியவெதிர் குதித்தோடி
வருகயல்கள் துன்றுவயல்சூழ்
புகழ்ச்சோண கிரியிறைவர்

விடைப்பாகர் அமரர்விழி புதைத்தேபி னிருகைதொழும்
அங்கிவடிவார் தடவரையெனுவி போலுமயிலார். ()

மலைப்பார மெனவளரு தனப்பார மெழுதிடினும்
வளத்தோடு பெருகுணமி
ரண்டும் வருமோ
விருப்பான கரியகுழல் இருட்போல வெழுதிடினு
மிருத்தேறு வரியளிமு
ரன்றுவருமோ மதர்ப்பான
விணைவிழிகள் வடுப்போலவெழுதிடினும் மடப்பார்வை யிருகுழைக
டந்துவருமோ குழையெழுதிலூசலாடிவருமோ. ()

மலர்த்தாளை வனசமலர் தனைப்போல வெழுதிடினும்
மலர்ப்பாய லனமென்ந
டந்துவருமோ உறுப்பான
திலகனுதல் விதுப்போல வெழுதிடினும் உவப்பான
குறுவியர்வ ரும்பிவருமோ
வரிக்கோல மிடறுகமு
கினைப்போல வெழுதிடினும் மாப்பாவை யுருகுமிசை
யின்பம்வருமோ விரலெழுதில்வீணை பேசவருமோ. ()

இலைப்பாதி யிழையுமென நுசுப்பாக வெழுதிடினு
மிதைப்போல வொசிவொடுத
ளர்ந்து வருமோ
வனப்பேறு திகிரியென மணித்தோள்க ளெழுதிடினு
மயிர்க்கால்கள் புளகிதமெ
றிந்துவருமோ இதழ்க்கோவையதனைமிகு
சிவப்பாக வெழுதிடினு மிளைப்பான பொழுதமுது
வந்துதருமோ உகிரெழுதில்மீதுலாவிவருமோ. ()

எழுத்தோடு முறுவல்தன நகைக்காக வெழுதிடினும்
எதிர்த்தாடு புலவிநகை
இந்துவருமோ மதிப்பான

வுடலையொரு கொடிப்போல வெழுதிடினும் மயிற்சாய
லொருசிறிது தங்கிவருமோ
எடுத்தாடு படமெனஅல்
குலைப்பேணி யெழுதிடினும் இதத்தோடு மழுதகுதி
கொண்டுவருமோ கிழியெழுதிலேதுலாபமுரையீர். ()

முற்றிற்று.

---

சிதம்பரத்துச்

## சிற்றம்பலவாணர் வண்ணம்.

இராகம்—புன்னாகவராளி—ஆதிதாளம்.

தையத் தனன தத்த தனத்தந் தானன
தையத் தனன தத்த தனத்தந் தானன
தத்தந்தன தத்தந்தன
தத்தந்தன தத்தந்தன
தத்தந்தன தத்தந்தன
தத்தந்தனதான தனதான தந்ததத்தந்தானனா.

வள்ளைக்குள் விழிவைத்த குறப்பெண்போல்வரு
தெய்வத்துரையளித்த துரைப்பெண்காதர்
செப்பும்பிரண வத்தின்பொரு
ளைக்கண்டுசி ரக்கம்பமொ
டர்த்தஞ்சொல் முகச்சந்திரனை
முத்தங்கொளும் வாயர்
வெள்ளித்தளிர்நிறத்த எருக்கம்பூமலர்
வில்வக்கிளையில்வைத்து முடிக்குந்தூயவர்
அக்கொன்றையும் இக்கொன்றையும்
அக்கங்கையும் இக்கங்கையும்
அத்திங்களும் இத்திங்களும்
வைக்குஞ்சடை யாளர்

வள்ளத்தினில்வடித்த கருப்பஞ்சாறதை
யள்ளிக்கொடுகுடித்த தினிப்பென்றேதின
மெச்சுங்கிளி மெச்சுங்குயில் மெச்சுங்கனி
சொற்கண்டவர் கற்கண்டிது கற்கண்டிது
கற்கண்டென வோது
சிவகாமசுந்தரிப்பெண்பாகனர். ()

வல்லொத்ததனம்தைக்க மிதிக்கும்பாறையில்
வல்லிக்கொடிமுளைக்க மிதிக்கின்றோர்சத
பத்ரந்தரு புட்பம்பல புட்பம்புனை
தற்கங்கொரு புட்பங்குறை யக்கண்டும
லர்க்கண்புனை பாதர்
பிள்ளைக்கறிதனக்கு விருப்பம்போல்வரு
கள்ளப்பசிதணிக்க நினைத்தன்போடுசெய்
கைப்பொன்றுபு ளிப்பொன்றுது வர்ப்பொன்றுவு
சிப்பொன்றித மெய்த்தொண்டர்சி றுத்தொண்டர்ச
மைக்கும்பரி பாக
வையத்தைவிலைபெற்ற பதக்கந்தான்விரி
பைவத்தவரவத்தி லமைக்கின்றோர்மணி
வச்ரங்கள்ப திக்கின்றக டுக்கன்கள்வி
ரற்கொண்டப வித்திரங்களெ னக்கொண்டுத
ரிக்கும்பட நாகர்
விடநாககங்கணத்தின் பூணினர். ()

தெள்ளித்தெளியவைத்த தமிழ்ச்செந்தேன்விலை
தையற்பறவைபெற்ற இதழ்செந்தேனென
அச்சுந்தர ருக்கென்றதை விற்குந்தொழில்
கற்கின்றவர் அப்பன்கவி புத்திரன்கவி
யைக்கொண்டவி னோதர்
கல்வித்தமிழுரைக்க நடக்குஞ்சீரடி
பல்லக்கில்வருதற்கு நினைக்கின்றோர்கன
கக்கிம்புரி யிற்கொம்புதிர் முத்தஞ்சொரி

ரத்தம்பவ ளத்தின்ப்ரபை யைத்தந்திட
மைக்குன்றுரி வீரர்
தெவ்வர்க்குயர்பொருப்பை வளைக்கின்றோர்சிறு
கொவ்வைக்குள்நிலவைப்பின் விளைக்கின்றோரா
வெட்டுங்கரி யெட்டுங்கிரி யெட்டுங்கட
லெட்டும்புவி யெட்டுந்திசை யெட்டும்பரி
வட்டம்புனை நேயர்
தலைமாலையுந்தரிக்குந்தோளினர். ()

செய்யிற்கயல்குதிக்க மணக்கஞ்சோலைகள்
செய்யிற்சொரியவிட்ட மதுக்கொண்டேவய
லூக்கும்பயி ருக்குங்கமு குக்குங்கத
லிக்குங்கட லூக்கும்புய லூக்குங்குளிர்
விக்குந்தொழி லான
பள்ளப்பயலொருத்த னெதிர்த்தங்கேவரு
பள்ளச்சிறுபெணிட்ட கடைக்கண்பார்வையின்
மைக்கொண்டது டிக்கின்றதை மச்சங்களெ
னச்சென்றுபி டிக்கும்பொழு திற்கண்டுவி
ளைக்குங்குறு மூரல்
செய்யிற்குமுதமொய்த்த மலர்ச்செந்தேனிறை
தில்லைப்பதிதழைக்க நடிக்கின்றோர்கம
லத்தன்குலி சத்தன்துள பத்தன்சய
நத்தன்பணி கர்த்தன்புலி நித்தம்பணி
சிற்றம்பலவாணர் வரை
மாதருந்துதிக்குந்தோகையார். ()

வெள்ளைத்துகிலுடுத்த சயிக்கந்தான்மக
னுள்ளுக்கொலுவிருப்பை யுணர்த்துங்காணத
னைக்கண்டுக ளிக்குங்கள வைக்கண்டெதிர்
நிற்கின்றவர் வெட்கந்தனை யுட்கொண்டொரு
பக்கந்தனில் நாணி
மெள்ளத்தழுவணைக்கு ளடுக்கின்றோர்த்தன
புல்லிக்கொளமடிக்கு ளிருக்கின்றொரொரு

முத்தந்தர முத்தந்தர முத்தங்கொள
முத்தங்கொள இத்தந்தம மூத்தும்புல
விப்பெண்பிழை தீர
வெள்ளிக்கதிர்கிழக்கி லுதிக்குங்காணது
சொல்லப்பெழுதிலைக்க ணுறக்கம்போலவென்
மெய்க்கங்கணை தைக்கின்றதி லக்கந்தபொ
டிச்சிந்திட வெச்சென்றலு மிச்சம்பழ
மொற்றும் பொழுதாறும்
இருபேருடம் பிணைப்புந்தீருமே. ()

வெள்வெற்றிலைகடித்த சுருள்தந்தாள்கல
வெல்லத்திலுமெனக்கு ருசிக்குங்காணதெ
னக்கென்றுமு னக்கென்றுமி லைப்பங்குபி
றித்துண்பதில் தப்புண்டுபி ளப்புண்டுகி
டக்கின்றத னேக
முல்லைக்கணைவெளுத்த முருக்கம்பூவென
துள்ளத்தையொருமிக்க உருக்குங்காண்மலர்
மைக்கொண்டமு டித்துஞ்சர
சச்சிந்துப டித்தும்புழு
கைக்கொண்டுத ரித்துந்தழு
விக்கொண்டிதமாக மெள்ளத்துகிலைவிட்டு
நெகிழ்க்கின்றேனவர் பையத்திருவிளக்கை
யவிக்கின்றார்நவ ரத்னங்கள்ப திக்குந்தொடை
சுற்றெங்குநி ரைக்கின்றதி லெட்டொன்பது
பத்தஞ்சுவி ளக்கின்சுடராக
இளமூரல்தந்தெனைப்பின்கூடுவார். ()

கள்ளித்தனைகுடித்த மயக்கந்தானென
மெய்யிற்பரவசத்தொ டணைக்கும்போதுட
விற்சென்றுகிர் தைக்குந்துணை மைக்கண்படை
வெட்டுங்கரி யிற்கொம்புகள் குத்துங்கல
விச்சண்டையி னூடு

கிள்ளுப்படுதெனக்கை நெரிக்கின்றாள்வலு
கள்ளிக்குமிதுமெத்த விருப்பங்காணய
னத்தும்பிப றக்குங்கள பத்தும்பியெ
திர்க்குங்குழ லிற்றும்பிம றைக்குங்கமு
குத்தும்பியி ஞேசை
கல்லுக்குருகுவிக்கு மிதைக்கண்டாலொரு
பையற்குயிர்தரிக்க வழக்குண்டோமத
னஸ்த்ரங்கள்து ளைக்கின்றதில் ரத்தங்கள்து
ளிக்கின்றதெ னக்கண்டுப்ர மிக்குந்தில
தச்சிந்தூர வேர்வை
[illegible]யானையுங்குளிக்குங்காணுமே. ()

கையத்தனைபடத்தை விரித்தங்கேயிடை
மையத்திலொருசர்ப்பம் நடிக்குங்காணளி
னக்கண்கள்க றுக்குங்குவ ளைக்கண்கள்சி
வக்குங்குமு தக்கண்கள்வெ ளுக்கும்புள
கக்கொங்கைக ளாடும்
ளள்ளத்தனையிருக்கு மிடைக்குஞ்சேதமொ
ரெள்ளத்தனையிரக்க [illegible]க்குண்டோவென
அக்கண்கள்கொ[illegible]ங்கைக்கண்பட இக்கண்கள்மு
மூக்கண்பட மைக்கண்கள ரைக்கண்பட
மெய்க்குந்தெரி யாது
கைவிட்டாசிலைக்கு ளிருக்கும்பாலலை
துள்ளித்திவலைசுற்றி யிறைக்கும்போதலர்
விற்கொண்டச மர்த்தன்கையி லைக்கின்றத
னைக்கண்டுரா திப்பெண்பனி நீர்ச்சொம்புதெ
லிக்கும்புன லாகும்
அனுபோகமும்பருக்குந் தேடுமே. ()

முற்றிற்று.

---

# மூவரையன் வண்ணம்.

இராகம்—புன்னாகவராளி.

தனதனதத்ததான தானனதனத்ததந்த
தனதனதத்ததான தானனதனத்ததந்த
தனனதந்ததந்ததான
தனனதந்ததந்ததான
தனனதந்ததந்தான தனனதந்ததனதன
தனதாந்ததனதானதாத்தன.

ஒளிவருபச்சைமாலை வாடினதொடைக்கிசைந்த
புதுவயல்வைத்தகோதை நாயகிகருத்துகந்து
விழியுகந்துதந்துதேற
லருளுகந்த இனிசொல்வாணி
தமிழுவந்துபண்டசோதை தனமிகந்ததயவினன்
எவரையுநடத்தினலு மாதரவுபெற்றிணங்கி
யவரவர்மட்டிலேத
ராதரநடத்துகண்பன்
இடையில்வந்தடைந்துளோரு முதலினங்கலந்துளோரு
மிருமருங்கிருந்துவாழ நடுவிருந்தநிலைமையான்
வறுமைபடைத்தவீடு
பாலொடுபுசிக்கிலந்த
மகிமைநமக்குவீறு வீறெனவளர்த்தகொண்டல்
வெடுவெடென்றவன்சொலோசை; கனவிலும்பிரந்திடாது
வெகுரசம்பிறந்தவாயி
னகைபுரிந்தலவிதவான்
இகல்வேந்தர் தொழுசேனைமூர்க்கவான். ()

விரிகடல்வட்டமேழு தீவுமதிரத்துரங்க
வடகனவட்டமேறி வாளரசரைத்துரந்து
வினையரண்பிடிங்கிராக
முடியலைந்துலைந்துபோக

வலமிடந்திரும்பியாடு பரிவுகொண்டலகிரியான்
மலையுமெதிர்த்தவேளை யோர்மசகமொக்குமென்று
மனதுபெலத்தவீர
சாதனைசெலுத்துசிங்கம்
வடகலிங்கர்வங்கர்சீனர் குருதர்கொங்கர்கங்கர்சேரர்
வகைவிளங்கவந்தராசர் தொகைவிளங்குகொலுவினன்
விசையமகட்குமாலி
னுமலர்கள்மட்டலர்ந்த
தளவுகொடுத்தமாலை தோளிடுமுக்ரதுங்கன்
விசிறுதென்றல்மன்றல்வீசு கவரிநின்றலம்பநூறு
பரிசைசென்றுகண்டராசர்
பணிகைவந்தசிவிகையான்
இசைதாங்குகவிமாலை சூட்டினோன். ()

எளியவரைப்பிரதாப ராசரெனநட்டதன்றி
வலியவரைப்பிரசாத ராயுழலவிட்டவென்றி
எழில்சிலம்புநின்றுலாவு
விருதுதண்டையொன்றுபாத
சிறுசதங்கையொன்றுதாய ரணியுமுந்தியணியுமால்
மதுரமிகுத்தபாகு சாரமதனிற்சிறந்த
பொருளறிகற்பிரதாப
நூல்பலதமிழ்ப்ரசங்கி
மனிதரென்றிருந்தமேலாப குடிதிறம்புவஞ்சர்காண
உலகமெங்கனுந்தியாக பிரபலஞ்செய்புகழினன்
எழுதரியிட்டநாள்வெ
ளேடெழுதுசட்டமிஞ்சி
நவரசமிட்டவோலை மேல்வரியிலிட்டநண்ப
னினியநன்குணன்சுபால பரிசனங்களின்பமேரு
வினைநலங்கனந்தராசு
நிறையினின்றபெருமையான்
மகிழ்சாந்தமணவாளனாட்கொள்வோன். ()

இரசிதசித்ரகூட மாளிகைமுகப்படர்ந்த
பகலவனெற்றையாழி தோரணமறுத்தகம்ப

மிடைதவழ்ந்துபஞ்சபாணி
குடையிதென்றியம்பவானி
விரவுவந்ததிங்கள்போல விடியவந்தநிலவுகால்
வரியளிதொட்டிலாடு தாமரைமுகப்பில்வந்து
சுரிமுகநெற்றிமீது
நாளுமடிபட்டுநொந்து
வயவுகொண்டபண்டியோசை குமுகுமென்னுதொண்டையூதி
வளர்கிடந்தவம்பியேறி மடைதிறந்தநெடியகால்
இருகரையுமுத்துவீசு
வீரைநகரைப்புரந்த
திருமலைமுத்துவீர மூவரையன்மைத்துனன்பொ
னிமயமுங்குலுங்க வீறுபுயமணிந்திடுங்குமார
னிணையில்ரங்கனெங்களுன
தமயனெங்கள்புணரியான்
வளமோங்குகளைவேள்விநாட்டிலே. ()

ஒளிவிடுமுத்தடிபெ ணேயுனதுபற்சிவந்த
பவளமுமொத்திராத டியுனிதழுக்குவஞ்ச
முடையமிஞ்சுநஞ்சடிக
ணினியமென்கரும்படிசொ
லழகுதந்தமந்தகாச முயிரையுண்டநமனடி
சிறுபிறையொப்படிசெ வாணுதம்மணத்தகந்த
பொடியிடுசெப்படிபொ
னுபரணமிட்டகொங்கை
செறிசெறிந்தவிந்தையான சொருகுகொண்டைமஞ்சடியி
னிசைமுழங்குமெண்புளோசை குமுறுசங்கமிடறடி
யுதரதலத்தின்மீது
ரோமவரைசிற்றெறும்பு
சரிரமெழுக்கடியு னிரமயமற்றவம்பி
யுனதுநெஞ்சிரும்படிமி னிடைதுவண்டகொம்படிமெ
லடிகள்பஞ்சுபஞ்சடியென்
மனதுபந்தமெழுகடி
சுகிவேண்டிலெனே வாரமாக்கடி. ()

உடையைநெகிழ்க்கவோக ஞடிநிழலொத்திலங்கு
மரவபடத்தைமூட வோதுடிதுடிக்குதென்கை
உபயமென்குறங்கின்மார
நயிநயந்தொடங்கவோமெல்
விரலரும்புகொண்டுநாபி மலர்வளைந்துகுடையவோ
செவிமடலுக்குளேயெ ஞவினுனியிட்டளைந்து
புளகமெழுப்பவோப
லாவிருகதுப்பைமென்று
திரள்பழங்கனிந்தகோவை யிதழ்விளிம்பையுண்கவோசொ
லணியிலங்கனங்கராச கலைநகங்கொளெழுதவோ
உடலையிறுக்கவோசெ
வேமலைகளொத்தகொங்கை
யொருகுகொடுக்கவோக ணேயுன்முகமுத்தரும்பி
யொழுகுதென்றுகொஞ்சவோவு னுடன்மகிழ்ந்துகெஞ்சவோசொல்
புளகிதஞ்செறிந்துமேவ
கரிகரஞ்செய்தணையவோ
துடையேந்திமடிமீதிலேற்றவோ. ()

நளினமுகத்தின்மோக சேவையுமதற்கிசைந்த
கொடையுமளிக்குமேயுன் மேனிபதறித்தியங்கி
நடுவுதொங்கல்விண்டபூவை
யளகபந்திசிந்துமேபொன்
வளைநெருங்கிமுன்கைநீல வளையுடைந்துசிதறுமே
முழுமணிரத்னமாலை சினமணியுட்கலந்து
சுவடுமறைக்குமேம
லாடுகுழையத்திலங்கு
தனமுகங் குலுங்குமேசெ மதிமுகங்குலங்குமேமெ
யழகுகந்தகுந்தளோலை குழையிறங்கியுருளுமே
நடுமணிபத்திபாய
ஆடுமொருசுட்டிதொங்கல்
அகலியகொப்புமாடு மேயதுமறைக்கிணங்கி
நடனமிஞ்சுகொஞ்சுகாலி லிருசிலம்பலம்புமே

மூபரியின்பமின்றுகாண
விழியனந்தம்மையுமே
மிகமூண்டமனதாசை மூட்டுமே. ()

நயனமடைத்துமூடி நாசியிலுயிர்ப்பிணங்கி
விரலைமடித்துவாயி லூதியுறுமிச்சிணுங்கி
நயமுடன்பிணக்கிலீலை
புரியுமந்தரங்கமோடி
நினையநொந்துநொந்துவாட இழைமருங்குல்குழையுமே
படபடெனவுச்சிமீதி லேசடசடச்சடென்று
விழுபதினெட்டுமேள
தாடனமலிந்துபொங்க
திகழ்பழங்குழம்பியாடு கனதனம்பிதுங்கிமார்பி
லுதையநெஞ்சுநைந்துசோர உதையில்மிஞ்சிநகரவே
இருதலையொத்தகாம
மார்சலமடைத்திறந்து
நெடுகவிரித்தபாயி லேறியணையிற்பரந்து
கறுமணங்கலந்தபோதில் உயிரிரண்டுமொன்றதாக
பரமவின்பம்வந்துமூடு
கலவியின்பமினிதுகாண்
விதிதோன்றிலனுபோகம் வாய்க்குமே. ()

முற்றிற்று.

---

## இராமேச்சுரத்து
# இராமநாயகர் வண்ணம்.

இராகம்—புன்னுகவராளி.

தனதனதத்தன தானதந்தன தனதனதத்தன தானதந்தன
தனனதனனதன தனனதனனதன
தனன்தனனதன தானதானன
தானதன தந்ததனதானன.

பகவதிநித்யகல் யாணிசங்கரி பயிரவி நிக்ரக
காளியந்தரி உலகுகிடுகிடென
யிடன்முடியின்மிசை நடனமிடுகவுரி
நாகபூஷணி சரஸ்வதிலட்சுமி தேவிகும்பிடு மிருசரணத்திரி
சூலிகண்டகி பதறியலகைசில
கதறியிணையுகிரி லூதறியெறியுமொரு
பூதவாகினி பருவதவர்த்தனி யாதிசுந்தரி அநுபவியுத்தமி
நாககங்கணி அருணவெயிலொழுகு
தருணவடிவழகி கருணைதிருவுருவ
மானகாரணி தேவியொருபங்கிலுறைநாதனுர். ()

பகடுநடத்திய காலனெஞ்சக முறியவுதைத்திடு பாதபங்கயர்
மதனுமவனுடைய சிலையும்வடிவழகும்
எரியஅழற்விசிறு பாலலோசனர்
அமுதுபிறக்குமுனேகருங்கடல்வயிறுகிழித்தெழும் ஆலமுண்டவர்
சனகர்முதலினர்கள் பரவவடதருவி
னிழலிலுறையுமொரு ஞானதேசிகர்
பவளவிதழ்க்குள்வெண் மூரல்கொண்டுமுன் அடையலர்முப்புரம்
நீறுகண்டவர் உபயகடனடுவில்
முழுகியழகியச னிதியில்வருபவர்செய்
பாவமோசனர் வாசமிகுகொன்றைமலர்மாலையார். ()

மகதர்துலுக்கர்ம ராடர்சிங்களர் குகுதர்களொட்டியகர்
னடர்கொங்கணர் வடுகர்குடகரொடு
நிடதர்மகுடமுடி வருடுபதயுகள
ராஜகேசரி எழுபதுலட்சது பாகிமண்டிய
புகையிலதிப்ரமை யால்மயங்கிய
அடையலர்கொடிமதில் இடிபடநடவிய
த்ரிமததடகரட யானையானெழில் வனருகலட்சுமி
தேவிதங்கிய இரணியகர்ப்பசு
தாகரன்செய நரபதிகசபதி
செயபதிதனபதி ரவிகுலபதிரகு நாதபூபதி
சேதுபதிநம்பு மிருதாளினர். ()

வனசமலர்ப்பொலி சீதையென்றிடு திருமகளைக்கொடு
போமிலங்கையில் அரசனவனுடைய
தலைமகனடுமக னிளையமகனொடுபல்
கோடிசேனைகள் முழுதுமறுத்தெதி ராடுகும்பகன்
றனையும்வதைத்துவி பீஷணன்றனை
அரசுநிறுவியொரு சனகிசிறையைவிட
மகரசலதிதனில் ஆதிநாளையில் மலைகொடணைத்தருள்
சேதுபந்தன ரகுபதியர்ச்சனை
யால்விளங்கிய பொழுதில்மனமுருகி
அதிகவரமுதவு கருணைபொழிவரத ராமநாயகர்
வாழ்வுபெறு செம்பொன்வரைமீதிலே. ()

விகசிதபுட்பவி தானமஞ்சமும் நறுமலர்மெத்தையும்
நூறுபொன்பெறு தழுவணையுமொழுகு
மிலகுமணவறையில் வருவள்கலபமயில்
போதுலாவுவள் சரிகைரவிக்கையு ளேபிதுங்கிய
தனங்களிலெத்தனை ச்சரபையங்கவர்
சவளிநடுவிலொளி பளபளெனவொளிரும்
வயிரவிலையதொரு நூறுகோடிபொன் விசிறிசுழற்றிய
கோலமுன்கையில் வளையல்மயக்குது
பாவிசிந்தையை இடையழகிலுமவ
ளுடையழகிலுமிரு தொடையழகிலுமயல் மீறுதேமனம்
வேறுமொரு பெண்களையுநாடுமோ. ()

விரகமெனக்கமை யாமல்முந்தியை வலியவிழுத்துமு
னேசிணுங்கியென் மடியில்விழுவள்புனை
சலவையுரிவளதில் வெளிகள்தெரியுமிகு
ரோமரேகைகள் கவுனெநெரிக்கையி லேரசம்பெறு
மிதழையருத்துவர் நீயிதங்கொடு
தனத்தின்தனத்தின்மெல நெருடுநெருடுமென
மழலைமொழியிடைவி டாதுபேசுவள் விடுவிடுசற்றென
மேலெழும்புவள் உபரிதொடுத்தங்
கேயிறங்குவள் அமளிமிசைதுவள்வ

ளிடையிலிடையிலொரு கலகமிடுவளுற வாவள்மீளவும்
மோகமதுகண்டதில்லை ராமனே. ()

முகமதியிற்குரு வேர்வரும்பிட அழகுசனித்ததெய்
வீகமென்சொல்க உடல்முழுதும்வளர்
புளகமெழமிகவும் எனதுசெவியுள்நுனி
நாவில்நீவுவர் கடிதடமத்தியி லூடிருந்திடு
மணியையசைக்கையி லேகனிந்ததில்
அமிர்தமிளகிவர வுலையிலிடுமெழுகி
னுருகியுருகுவெகு தாகமீறுவள் முடியில்வலக்கைய
ளீரெனும்பொழு துடலிலெனக்குசி
லீரெனும்படி இடதுகையில்முதுகு
தடவியெனைவலிய வலியமருவுவள்பி னேதுதாமஸம்
மாமதனசண்டை வெகுதூளியே. ()

மொகுமொகெனத்தொனி மீடுமென்குறல் கமுகிலெழுப்புவள்
பாததண்டைகள் ஒளிகள்கதறியிட
வளைகள்சிதறமிகு வுனதமயிரின்முடி
பூசலாடிட கடினபுணர்ச்சியி லேமகிழ்ந்திரு
தொடையைமலர்த்துவள் போகம்வந்தது
சமயமிதுசமய முனதுவசமெனுயிர்
பதனமெனமொழிவள் நாணவேளையில் தனத்தைமுகக்குழு
னேபதிந்தது பிடரிநகக்குறி
கோடியுண்டிரு மனதுமகிழ்வுபெற
ரதியுமதனுமென மருவுகலவிசரி போகமாய்வரு
காமரசநெஞ்சில் மறவாததே. ()

முற்றிற்று.

சேதுபதியவர்கள் மீது

# அருமைத்திரிபுவண்ணம்.

இராகம்—புன்னாகவராளி.

தானனதந்தனனு தன தானனதந்தனனு தன
தானதானனதானனு தன தானதானனதானனு
தானதானனதனனதானனு.

நாடியசண்டனையே யடல் கூர்ப்ரசண்டனையே பிறை
நாறுமாசடையானையே விடை யேறுமாசடையானையே உமை
மாதொருபங்கனையே வர
ராமலிங்கனையே தொழு
மானபாகன்வில்வாசியா னெழில்வேனில்வேளினும்வாசியான்விரை
நாண்மலர்நங்கையினன் இகல் வேலிநங்கையினன் முது
ஞானநூலெழுதேடினன் விற
லானதோர்புகழ்தேடினன் தானை
யானணிகனகதானையான். ()

நானிலநன்குடையான் மதி போலுநன்குடையான் இசை
நாவலோர்தமிழ்மாலையான் வெயில் போழுனேதருமாலையா னிரு
மாநிதிதண்டிகையான் ஒரு
கோடிதண்டிகையான் அணி
வாலசூரியசோதியான் வரு மேலுளோர்குறைசோதியான் வரி
நாகணையன்றுடையான் அற மேயியன்றுடையான் மறை
நாலுமேயவதானியான் மதி
யூகியானப்பிரதானியான் வள
மேவுமாவிலைதுயிலைமேவுமால். ()

சேடனெனுங்கலையா னொரு பேரையுங்கலையா னுயர்
தேகபூஷணபூதியா னனு போகவானனுபூதியான் மகு
டேசரையஞ்சலியா னொரு
போதிலுஞ்சலியா னுல
கேழில்வேதியராசியான் மிக வாழ்துலாமெனும்ராசியான் நிதி
தேடிநிலம்புதையா னடு போரினிலம்புதையான் மொழி
தீயரோடுறவாடிலா னலர்
தூயவரண்முகம்வாடிலா னடல்
மாரவேள்பரவிய குமாரவேள். ()

சீறுபங்கயமே சில நீடுபங்கயமே யுடை
தேனருமதகோடியே கினை நீள்வரால்சதகோடியே யெதிர்

பாய்வதுகொண்டலையே விளை
யாடல்கொண்டலையே பொரு
பான்மையான்மழைமாரியேபெய மேன்மையானநென்மாரியேவிளை
தேவைவருந்தளவாய் திரு மால்பசுந்தளவாய் குல
தீபனும்ரகுநாதனென ப்ர
தாபனும்ரகுநாதபூ பதி
வாழியேயிறைவரவர்வாழியே. ()

ஓடிவரும்படவே தகு மோதினம்படவே கரை
யோடமேவியசினியே பகை பாடமேவியசினியே செய
சோதிடம்புகளே சொலு
வாரடம்புகளே செறி
சோலையானபுனுகமே சர சாலையானதெனுகமே யரு
கோலமடங்குருகே யுள மேயிரங்குருகே திரை
யூரும்வேலையிலாமையே துகில்
சோரும்வேலையிலாமையே பல
தோகையேகொடிதுகொடிதோகையே. ()

ஓசைவலம்புரியே மிகு கேவலம்புரியே முகி
லூடுபோனதெனுணலே துகி லோடுபோனதெனுணலே திரை
மோதுதடங்கரையே கரை
யாதகொண்கரையே கன
மோனசாதகனுரையே யழை போனபாதகனுரையே நறை
யூறுகரும்பனையே விலை காய்சரும்பனையே மன
மோயுமோசிறுகூனியே பிறை
காயுமோவுடல்கூனியே மணல்
ஒலமேபுரிவதுகலோலமே. ()

கோடிசஞ்சலமே தணி யாதுசஞ்சலமே மிடை
கோரையோடுமெனீரலே பல தாரையோடுமெனீரலே கமழ்
தாழையில்வண்டினமே தரி
யாதுவண்டினமே கண

சாரலோலிடுகானலே பனி நீரலோசுடுகானலே துணை
கூடியமஞ்சனமே குளி ராதுமஞ்சனமே விரை
கூடவேபுனைபாசமே நிதி
தேடவேயவர்பாசமே மணி
யாரமேகனலுமலையாரமே. ()

கோதறுநஞ்சுறவே குயில் கூவுநஞ்சுறவே கலி
கோபமாதவசேதுவே பிர தாபமாதவசேதுவே புனல்
மூழ்குதிமிங்கிலமே துணை
யேதுமிங்கிலமே வரு
மூடலாமுழுகாவியே பெறு நாடெலாமுழுகாவியே கயல்
கூறுமலங்கினமே மதி தாமலங்கினமே யனு
கூலமாகியமேகமே முனம்
வேலனூர்சொலுமேகமே வரி
வாளையேமிகவுமெலிவாளையே. ()

முற்றிற்று.

---

# ஆண்கலை வண்ணம்.

இராகம்—புன்னாகவராளி.

தத்ததத்தந் தனந்தானன தானனதந்தந் தனந்தானன
தத்ததத்தந் தனந்தானன தானனதந்தந் தனந்தானன
தனந்தத்தன தனந்தத்தன
தனந்தத்தன தனந்தத்தன
தனந்தத்தன தனந்தத்தன
தானதனதானதத்தான தந்ததனதனதன.

நித்தியத்தின் சுகங்கூர்தரு பேரெழில்தங்குந்துலங்காரண
வுட்பொருட்பண் புருங்காரண வானவனென்றன்பவந்தீர்தர
வருந்தற்பர னெனுஞ்சிற்குண
தரன்சொற்பொரு ணிறைந்துற்றவ
ஷபங்கத்துரு வரன்பற்பல

ஜீவாதரவாதி சித்தியெட்டின் திறந்தோ்பல
மாதவரிந்த்ரன்பணிந்தோதரு விற்கலேச்சுந் தரந்தானுயர்
சேகரசந்த்ரன் பொலந்தாதவிழ்
அரும்பித்தளே யவிழ்ந்தெத்திசை
யினுஞ்சுற்றிய வயங்கப்பரி
மளம்பெற்றிடு கரந்தைத்தொடை மாதரணிமார்பர்
நிட்களக்கொங் தளங்காதணி மாதரியண்டந்தரும்பார்வதி
பொற்குவட்டின் கணந்தாவிய
மேருசுதந்த்ரன் பெருங்கோமளே
பொருந்துத்தம வரங்கட்கொரு
துசங்கட்டிய வருஞ்சிற்பரை மடந்தைத்பிடி
முனம்பெற்றிடு பாஞேதயசோதி
கற்ருேர்வணங்கருளினுருவினுன். ()

நிட்டைமுற்றும்பயன்றேறுத போதனர்சங்கம் பரிந்தேயுறை
கற்பகத்தின்றடஞ்சோலேகள் சூழ்விளங்குங்கடம்பாடவி
யடைந்தச்சம ணவங்கட்கரியினம்பற்றற
வடங்கக்கழு விடுஞ்சொற்றமிழ்
மடங்கற்பதி ஞாஞகரநாதன்
கத்துநற்சங்கினங்கூடிய பாயலேபொங்கும்பெருஞ்சாகர
விப்புவிக்கண் டினம்பாடிய பாவலரென்றுந்திரங்காமலே
இடும்பைத்துயர் அதன்கட்டுகள்
விடும்பற்ருெடு களேந்திட்டருள்
செயும்பக்ஷம ருவுஞ்சத்திய
தேவாதிபர்தேவன் ரெக்குவிட்டெங்கணும்போயுழல்
தானவர்துன்றுங்கணஞ்சூழிருள் பட்டெழத்தன்செழுந்தூவிகள்
கோதியவண்டங்குலேந்தேநிலே யசங்கக்கடல்
தருஞ்சிற்ருெலி யொடுங்கற்பமு
டிவின்கற்சனே யழுங்கக்குரன்
முழங்கிப்படர் கர்லாயுதமான
செற்ருர்நடுங்கவுயர்கொடியினுன். ()

முத்திவித்தென்றிடுகாவல ஞனசுகந்தன்புயங்காசல
வத்தனித்தன்சிலம்போலிடு சீதளமென்பங்கயம்போலொளி

யிலங்கிக்கனி வுடன்கற்பனை
கடந்துட்கசி வுறும்பத்தர்க
ளிரங்கித்துதி செயும்பொற்பத
தேஜோமயரூபன் ருத்திரத்தின்கடும்போர்புரி கோரமிகுந்துன்
றிடுஞ் சேனைகொள் அத்திரத்தின்கொடுஞ்சூரரை
யாதியனந்தன் படஞ்சேர்தொகை
மடங்கத்திசை தொறுந்தத்திய
விலங்கற்றிர ளதுங்குப்புற
நெடுங்கைக்கரி கலங்கத்தெறும் வாகார்வடிவேலன்
முக்கியத்தைந்தருந்தாருவி னீழலியங்கும்பெருந்தேவர்கள்
எத்திரத்தும் ஜெயங்கூறயி
ராபதமுன்றந்திடுந்தேவிபல் சதங்கைக்கழ
லிரங்கிக்கல கலென்றிட்டிட
வொதுங்கற்புத கருங்கட்குயி லெனும்பொற்
குறமானூர் மணவாளன்
மட்டார்செழுங்குவளையணியலான். ()

முக்கடக்குஞ்சரங்காதல்கொள் சோதரணம்பன்வரந்தானுயர்
சத்துவத்தின்பெரும்பூரண ஆறுமுகன்பண்டயன்காவலை
விடும்பெற்றியி னிணங்கித்தயை
புரிந்திட்டிடு குகன்சித்ரமு
ருகன்சொற்சர வணன்தத்துவ
மேலார்குருசாமி வித்தகத்தின்பரிந்தாழியி னீரைவிழுங்குந்
திடந்தானிறை மெய்த்தவத்தின்றனங்கோலிய வாடக்கும்பந்
தருங்கோமுனி மனம்பெட்புற
விதங்கிப்பிர ணவங்கற்றறி
நலன்றுய்த்திட வெழுஞ்சித்திர
மிகும்பச்சைனு மாயூரவிநோதன் முச்சகத்துஞ்சிறந்தேயெழு
கார்முகிலொன்றும் பசுங்காவிடை மொய்த்தமுத்தின்றடஞ்
சோர்வுறு தேனவிழ்கஞ்சங்களின்பாய்கயல்
அரம்பைக்கனி யுடைந்தெப்புடை
யிழுங்கட்டிய வரம்பிற்புக

வெழும்பித்தனி யிறங்கிக்களி மாறுவளநீடும்
மைக்கார்தொடும்பழனிமலேயின்வாய். ()

முற்றிற்று.

---

## பெண்கலே வண்ணம்.

தத்துவத்தின் பதந்தேர்முனி வோரெதிர்கெஞ்சும்
பொலஞ்சீறடி பத்மினிப்பெண் செழுங்கோதில்
வாணியிளம்பெண் கள்சிந்தாமணி
யிதஞ்சொற்பயில் வசந்தக்குயில்
மதன்கைச்சிலே ப்ரசங்கக்கலே பெதும்பைப்பிடி
நறும்பொற்கொடி மாமோகனமாது சித்திரத்தின்
சுகஞ்சேர்வைக லாமதியின்பங்
தருங்காமிது ரைத்தனப்பெண்
கனஞ்சேரயி ராணிபசும்பொன் குடம்போன்தனங்
குலுங்கக்கொடி நலங்கப்பணி யிலங்கத்தொடி
துலங்கப்பிடி நடந்துப்பரி
கையின்பத்தியின் மேல்மாடிகணுடி
னைத்திருக்குஞ் செழுஞ்சாளர வாசலில்வந்தங்
கெதிர்ந்தாள்விர கக்குறிப்புந் தெரிந்தாளொர்ச
லாமிடநெஞ்சங் கனிந்தேனகை
அரும்புற்றனள் விரும்பிப்பிணே
திரும்பித்தய வுடன்பட்சமு மகிழ்ந்தொப்புர
வுடன்தொட்டனள் நானேதனதாக்
விஸ்தாரமுஞ்சிறிதுபுகலுவாள். ()

சப்பிரத்தின் பிணந்தாடிநி லாமணிமஞ்சந்
தடம்பூவணே வைத்துமெச்சும் பதம்பாடினள்
சேர்வையிடுஞ்சந் தனம்பூசுவ
ளிடும்பொட்டழ கிலுங்கட்டழ

கிலுங்கொட்டவ ரையுந்திட்டுவள் புயங்குத்துந
னழுந்தைத்திட நீடாசையினேடு கட்டிமுத்தந்
தரும்போதவள் வாயதரந்தம்
பலஞ்சாறொரு பத்துலட்சம்
பெறுங்கூர்விழி லோகமயங்குஞ் சுகந்தாதிகள்
குரும்பைத்தன முரண்டச்சிறு அரம்பைத்துடை
யருஞ்சிற்றிடை நிதம்பத்தினும்
நகம்பற்குறி தாளாதடசாமி
சர்க்கரைப்பந் தலின்றேன்மழை யானதென்றும்
புகன்றூளர வப்பணத்தின் கொழுங்கூரயில்
நாநுனிகொண்டுங் குடந்தேனதில்
உடம்பைக்கிறு கிறென்றக்கண
மயங்கிக்களை தெளிந்தெத்திர மருந்தெத்தனை
விதங்கற்றனை நீயேகளவாணி
அத்தான்மயங்கிவருதணையடா. ()

மெத்தைமிச்சம் புரண்டாளணி சேலைகளைந்த
தெறிந்தாளெதிர் வெட்கமுற்றுந் திரும்பாணதை
மூடுவள்பின்தெந் தனம்பேசுவள்
பிணங்கிம்பிற கிணங்கித்தலை
கவிழ்ந்துச்சில விளம்பிப்பினை குனிந்தெத்தனை
விதங்கற்றனள் நாணுவிதமாக உச்சியிற்றங்
கரம்போடப வீரெனவுங்குங்
குமஞ்சேர்தனத் தைப்பிடிக்குஞ்
சுகங்காணச பாசெனவுங்கண் டுகொண்டாடுவன்
திரும்பிப்பர பரென்றுக்கரி கரந்தொட்டொரு
தரஞ்சுற்றுவள் மதப்பட்டணை
துவண்டத்தநி பூவார்கொடிபோலும்
மெத்தையிற்சென் றுளங்காள்பரி யாசமும்வம்புங்
கலந்தேசிந யத்தொழிற்குங் கசங்காளொரு
ரமுழுதும்பந் துகந்தாடுவள்
சொலுங்கொக்கொக மதன்சக்கர

முயன்றுத்தொழ பிரசண்டத்தொழில் மதங்கட்டுவ
ளுடன்தட்டுவள் வாதாடுவள்மீள
மட்டேறுகொந்தளகநெகிழவே. ()

வித்தையிற்கம் பயின்றுடுவள் கோல்விசைகொண்டுஞ்
சுழன்றேயுப ரித்தொழிற்கண் டதுண்டோவிது
நூதனமென்றும் புரண்டேறுவள்
கருஞ்சொற்குயில் கனிந்தக்குர
னெருங்கத்தினி மடந்தைப்புற வெனும்புட்குறல்
கணைந்தொற்றுவள் நானாவிதமாக மைக்கடக்கண்
சிவந்தேகையில் வால்வளையுஞ்செஞ்
சிலம்போலிட நெற்றியிற்சிந்
துரந்தேய்வுற வேர்வைகளெங்குங் கரைந்தோடவு
மரும்பொத்தனள் சுரும்பொத்தனன் வலஞ்சுற்றின
னிடஞ்சுற்றினன் ததும்பிக்குமி
ளிபொங்கித்துயில் நீராய்சமபோகம்
நெய்க்கனிப்பைந் தடந்தாமரை வாசனையெங்குங்
கலந்தேயிர திக்குமிக்கிங் கிசைந்தேர்திரு
நாளுமதன்சம் பிரமபோலிதை
சுகந்தக்கவு மனம்புத்தியு
மிசைந்தொத்திரு வரும்பட்சமொ டணைந்தொப்புர
வுடன்பெற்றிடு காமாகரலீலை
சற்றேநகிலைந்திடவுமுருகுமே. ()

முற்றிற்று.

---

# ஷ வண்ணம்.

தனதனனதானதான தனதனனதானதான
தனதனனதானதான தனதனனதானதான
தந்தனதானதான தந்தனதானதான
தந்தனதானதான தன்னனனா
தனத்ததனதனதனனா.

பருவரதியேசலாப சரசமயிலேவிணுடர்
அமிர்தவடிவேவைபோக ரசகுளிகையேபெணேப்ர
சங்கமடையுன்மேனி தங்கமடைவில்வேள்க
ளங்கமடையிதேவி லங்கமடைகுணுவி
மருவின்மணமேகணேயெ னருமையறியாததேது
சபடமலடைபொயாணே யிடுவதலடைபொருது
வஞ்சமடையிதேபிர பஞ்சமடைசைபோக
புஞ்சமடையுன்விடு தஞ்சமடையலாது
பரகதியிலேதுலாப முனதுகனிவாயினூறல்
பருகிலதுகாசியாடி வருவதிலுமாவிசேஷம்
வங்கணமாகவேம ணங்கமழ்ப்பாயல்மீதில்
இங்கிதலீலையேபு ரிந்திடநாணமேவு
பெண்ணரசேமயக்கவசமலவடை.

பவளவிதழோகபோலம் அழகுமுகமோவெணவி
பருகும்விழியோவெணீறு நுதலிணெளியோபொன்மேனி
மஞ்சனின்வாசமோசெ றிந்திடுதேமலோநெ
ருங்கியமார்பிலேது ரும்பொடுநூல்புகாது
சகலதனமோமெய்ரோம உதரதலமோவின்மார
னரண்மனைவிலாசமான அரவபடமோகணுடி
இங்கொருபாவிநான றிந்தறியாமலேபு
லம்பியபாபதோஷ முன்றனேயேவிடாது
பழிவருமடைசொனேனு னடிமையெனேயாளவேணு
மிதுசமயமாகுநாளே யினியுடல்பொருதகாணு
மென்றுசொல்போதிலேந டந்துகைலாகுமீதி
லென்பர்மைதீரமேவு பஞ்சணைமீதுகூடி
நன்னயமாய்மடிக்குளவள்விழுகுவாள்.

ஒருசுருளேமாறியீவ ளொருசுருள்தன்வாயினேடு
பருகியுமிழ்வாளென்வாயி லதுவமிர்தபானமாகு
மங்களநாதவோசை யெண்குரல்காதிலேநு
ழைந்திடுபோதுதேவ துந்துமிபோலவாகு

முடுகியெதிர்தாடனுதி சடசடெனரோமசாசி
புளகம்வருபோதுகாம சனதவெறியேறியாடு
பம்பரமாகவேசு மூன்றுகைகால்விடாது
சந்தொடுசேரவேபு ணர்ந்துகொள்வாள்ப்ரயாசி
ஒழுகுதனில்வீழ்வள்சேலை தலைகுலையும்வேளையுசாம
னுரிகுவள்பளாசபாசு தனநெருடுமேலுமேலும்
விந்தையதாகவேசு கந்தெரியாமல்மாது
பந்தையலீலையேய றிந்தவணரடாசொல்
என்னமுனேயணைத்திறுகியிகலுவாள். ()

உபரிரதிகேளிகூடி முகமதியில்வேர்வையாட
முதுகுகுழலூசலாட முடிமலர்கள்பாதிசோர
மந்தரமேருவான கொங்கைளாடவாட
பந்துகள்போலவேமி குந்துசெய்வாள்பொனேலை
பளபளெனமேனிவேர்வை சலசலனவேசவாது
கமகமெனவேகபோகம் வெதுவதெனவேமுனுள்செய்
இங்கிதலீலையோகு ழைந்தபொன்மேனியோசி
வந்தகண்வேல்களோச வுந்தரமோடியோவென்
உயிர்பருகும்வாலைமோக ரதிமதனகேளிதேவ
பதவியனுசாரபோக இகபரநல்வாழ்வுதோணும்
வஞ்சியுநானுமாயி ரங்கலிகாலமாய்ம
கிழ்ந்தணையாமலேயி ருந்ததுகாமமாயம்
எண்ணியபோதுருக்குமணதொருமையே. ()

முற்றிற்று.

---

# ஷ வண்ணம்.

இராகம்—புன்னகவராளி.

தானதந்தனனு தன தானதந்தனனு
தனதானதந்தன தானதந்தன
தானதந்தன தந்தனதான
தானனதானதனதானனு.

பூவருந்திருவே மத னார்தொழுங்குருவே
அனு போகபஞ்ச மதாகிவந்தினை
ஞோர்மயங்கவ ரும்கிளியேயெ
னாசையின்கனியே யுயிர்போலவுந்தனியே
யெனை யாளவந்தக ணேயணங்கர
சேயிணங்குவ தென்றுவில்வேல்செய் பூசல்கண்டனையே
மதி சூறைகொண்டனையே
அனு பூகிதக்தடி
யேனையுங்குடி யூழியங்கொள நன்றிதுவேளை
யேனேபெணேமனதிலாததே. ()

போகரஞ்சகியே அனி யாயவஞ்சகியே
பழி போடுவன்பழி காரியென்றனே
யாவருஞ்சொல நிந்தனையேறும்
லாடசங்கிலிபோல் மயல்
மூளவும்புலிபோல் தனநாடுமஞ்சளின் வாடைசந்தன
வாடையென்றலை மண்டையினூடு போயுறுஞ்சுதடி
வசை யூசறிஞ்சுதடி
அடி போடிமீண்டுசெ
யாதுபஞ்சணை மீதுவந்துகலந்தனை யாமல்
ஏதேதுதாமசமிதாகுமோ. ()

கோபமென்சொலடீ மனம் நீடுவன்களடீ
வனுகோரமுன்பெரு மோகமவந்துநெ யாய்நிரம்பவே
னெஞ்சதுகாமன் ஓமகுண்டமடீ
யிது தானார்கண்டமடீ
யினி யூமைகண்டக னவினெஞ்சுட
னேபுலம்ப விடும்படியேது கூடல்கண்டிலையே
மோழி யேதும்விண்டிலையே
ஒரு கோடிதும்பிடு
போடநின்றுப ராமுகஞ்செய்கு றும்பெனபாலம்
நானேனவிடேனுயர்சையோகமே. ()

கோவையின்கனிவாய் மொழி கூறுநன்கனிவாய்
அனு கூலமொன்றுமி லாமலிந்திர
சாலவிந்தை செயுந்தொழிலேனுன்
வீடுதஞ்சமடீ யிது
வேப்ரபஞ்சமடீ சன மேநிறைந்தவு
ளரிலிம்கிது கேள்வியுண்டுயர் வெம்பனைகோடி
கோடியுண்டடியொ தெரு
வீதியுண்டடியோ புனை
கோலமென்புவி பூதிகண்டவர் பேயனென்றிட
மன்றினிலேறி நாளுமலூர்வன்மடல்நாளையே. ()

முற்றிற்று.

---

பட்டணத்துப்பிள்ளை

## உடற்கூற்று வண்ணம்.

தனதனதான தனதனதான
தந்ததனந்தன தந்ததனந்தன
தனனதனந்த தனனதனந்த
தானனதானன தானனதந்த—
தந்ததனதான தனதானனு.

ஒருமடமாது மொருவனுமாகி யின்பசுகந்தரு
மன்புபொருந்தி யுணர்வுகலங்கி யொழுகியவிந்து
ஊறுசுரோணித மீதுகலந்து—
பனியிலொர்பாதி சிறிதுளிமாது பண்டியில்வந்துபு
குந்துதிரண்டு பதுமவரும்பு கமடமிதென்று
பார்வைமெய்வாய்செவி கால்கைகளென்ற—
உருவமுமாகி யுயிர்வளமாத மொன்பதுமொன்றுநி
றைந்துமடந்தை யுதரமகன்று புவியில்விழுந்து
யோகமும்வாரமு நாளுமறிந்து—

மகளிர்கள்சேனை தரவணையாடை மண்படவுந்தியு
தைந்துகவிழ்ந்து மடமயில்கொங்கை யமுதமருந்தி
யோரறிவீரறி வாகிவளர்ந்து—
ஒளிநகையூற லிதழ்மடவாரு வந்துமுகந்திட
வந்துதவழ்ந்து மடியிலிருந்து மழலைமொழிந்து
வாவிருபோவென நாமம்விளம்ப—
உடைமணியாடை யரைவடமாட வுண்பவர்தின்பவர்
தங்களொடுண்டு தெருவிலிருந்து புழுதியளைந்து
தேடியயாலரோ டோடிநடந்து—
அஞ்சுவயதாகி விளையாடியே. ()

உயர்தருஞான குருவுபதேச முந்தமிழின்கலை
யுங்கரைகண்டு வளர்பிறையென்று பலரும்விளம்ப
வாழ்பதினாறுபி ராயமும்வந்து—
மயிர்முடிகோதி யறுபதநீல வண்டிமிர்தண்டொடை
கொண்டைபுனைந்து மணிபொனிலங்கு பணிகளணிந்து
மாகதர்போகதர் கூடிவணங்க—
மதனசொரூப னிவனெனமோக மங்கையர்கண்டும
ருண்டுதிரண்டு வரிவிழிகொண்டு சுழியவெறிந்து
மாமயில்போலவர் போவதுகண்டு—
மனதுபொரும லவர்பிறகோடி மங்கலசெங்கல
சந்திகழ்கொங்கை மருவமயங்கி யிதழமுதுண்டு
தேடியமாமுதல் சேரவழங்கி—
ஒருமுதலாகி முதுபொருளாயி ருந்ததனங்களும்
வம்பிலிழந்து மதனசுகந்த விதனமிதென்று
வாலிபகோலமும் வேறுபிரிந்து—
வளமையுமாறி யிளமையுமாறி வன்பல்விழுந்திரு
கண்களிருண்டு வயதுமுதிர்ந்து நரைதிரைவந்து
வாதவிரோதகு ரோதமடைந்து—
செங்கையினிலோர் தடியுமாகியே. ()

வருவதுபோவ தொருமூதகூனு மந்தியெனும்படி
குந்திநடந்து மதியுமழிந்து செவிதிமிர்வந்து
வாயறியாமல்வி டாமன்மொழிந்து—

துயில்வருநேர மிருமல்பொருதுதொண்டையுநெஞ்சு
முலர்ந்துவறண்டு துகிலுமிழந்து சுணையுமழிந்து
தோகையர்பாலர்கள் கோரணிகொண்டு—

கலியுகமீதி லிவர்மரியாதை கண்டிடுமென்பவர்
சஞ்சலமிஞ்ச கலகலவென்று மலசலம்வந்து
கால்வழிமேல்வழி சாரநடந்து—

தெளிவுமிராம லுரைதடுமாறி சிந்தையுநெஞ்சுமு
லைந்துமருண்டு திடமுமலைந்து மிகவுமலைந்து
தேறிநலாதர வேதெனநொந்து—

மறையவன்வேத னெழுதியவாறு வந்ததுகண்டமு
மென்றுதெளிந்து இனியெனகண்ட மினியெனதொந்த
மேதினிவாழ்வினி லாதினிநின்ற—

கடன்முறைபேசு மெனவுரைநாவு றங்கிவிழுந்துகை
கொண்டுமொழிந்து கடைவழிகஞ்சி யொழுகிடவந்து
பூதமுநாலுசு வாசமுநின்று—
நெஞ்சுதடுமாறி வருநேரமே. ()

வளர்பிறைபோல வெயிறுமுரோம முஞ்சடையுஞ்சிறு
குஞ்சியும்விஞ்ச மனதுமிரண்ட வடிவுமிலங்க
மாமலைபோல்யம தூதர்கள்வந்து—

வலைகொடுவீசி யுயிர்கொடுபோக மைந்தரும்வந்துகு
னிந்தழுநொந்து மடியில்விழுந்து மனைவிபுலம்ப
மாழ்கினரேயிவர் காலமறிந்து—

பழையவர்காணு மெனுமயலார்கள் பஞ்சுபறந்திட
நின்றவர்பந்த ரிடுமெனவந்து பறையிடமுந்த
வேபிணம்வேக விசாரியுமென்று—

பலரையுமேவி முதியவர்தாமி ருந்தசவங்கழு
வுஞ்சிலரென்று பணிதுகிலுங்கல் களபமணிந்து
பாவகமேசெய்து நாறுமுடம்பை—

வரிசைகெடாம லெடுமெனவோடி வந்திளமைந்தர்கு
ளிந்துசுமந்து கடுகி நடந்து சுடலையடைந்து
மானிடவாழ்வென வாழ்வெனநொந்து—
விறகிடைமூடி யழல்கொடுபோட வெந்துவிழுந்துமு
றிந்துநிணங்க ளுருகியெலும்பு கருகியடங்கி
யோர்பிடிநீறுமிலாதவுடம்பை—
நம்புமடியேனை யினியாளுமே. ()



திருக்கழுக்குன்றம்

# வேதகிரீசர் வண்ணம்.



காப்பு.

வஞ்சித்துறை.

வண்டுவனக்கரி புண்டரிகத்தாள்
கொண்டனைநெஞ்சே முண்டதுவினையே.

குழிப்பு.

இராகம்—கல்யாணி.

தானதந் தனத்தனந்தன தனந்தன
தனதனதன தனதனதான தானதந்
தனத்தனந்தன தனந்தனந்தன,
தனதனதனதன தனதனதான
தானதனதனதன தானதனதனதன
தானதன தானதந்தன.

தலைவனை வியத்தல்.

ஞானனந் தனுக்கிடந்தரு நகந்தருங்கொடி
உமையபிரவிகவு ரியனருள்பாலை சூதாகுந்
தனத்திலன்பொடு கரந்தரும்பர
சுகநிலைதருமழு தருமறைநாடு

சீகாழியின் மறையவர் கோமான்வயினுதவிய கானேயுங்
குழற்பரம்பரை சினந்தவம்பன விழியலைமகள்கலை
மகளெனலாகி வாரேருங்
கடற்பெரும்புவி யொடும்படங்கிளர்
அரவரசருமுறை செயுமபிராமி நூலானுவல்வரியதொர்
மேலாநிலையதுதர நாலாவிங் கினித்தநன்கவி
வனைந்திடுந்தமி ழுரையனுகியதொரு
பரமகல்யாணி தேசாருங்
கடத்தவைங்கர வனுங்குறிஞ்சியி னிறையும்
னெயெனமு னடைதரநாடி யார்வோடவருடனினி
தாநீடருள்புரிபவள் போதார்விழி
யாமடந்தையோர்

நாவேயுங் குழற்சொலந்தரி நெடுந்திகம்பரி
திரிபுரைநிருமலை யொருசுகபாணி பாவாருந்
தனிப்பெருந்தகை நவின்றிடும்பர
துரியமுடியதனி னிவர்தருபோத
மாயேயிலகியநல மேயாகியமுழுமுதல் மாமேவுந்
திலைத்தலந்தனில் அரும்பொனம்பல நடனமுடையபரி
புரபதமேமுன் னேர்மேவும்
புலிப்புதன்கலை சொலும்பதஞ்சலி
முனிகவுடர்களிறை மனநனிநாட வோயாதருள்புரிபவன்
வேயார்தருமரியவன் நார்மேவுந் தவத்தரின்புற
மடங்கலென்றனை வருமிசைசெயவட
தருநிழன்மேவி நீடாருந்
திணித்தசம்ப்ரம நலந்தருஞ்சுக நிலைதருமதிநய
விதரணசீலன் ஆறுறகலபவன்முழு நீறுடியகுருபரன்
போதாசன னேடுவிண்டொழ் ()

ஆனெறெந் துரைப்பரங்கிரி பறம்பியந்தகு
மதுரைவடவனம ருணைதனவாயில் ஆரூர்மஞ்
சினைத்திடும்பொழி னெடுங்களந்துறை
சைவிளமர்தருமபு ரமொடுநளாறு
காறுயினனிலநெலை மாயூரமருகல்பெரு வேளூர்வெண்
டுறைப்பெருந்துறை வலம்புரம்பரு திநியமமறைசைபு

கலிமழபாடி காரோணங்
கொருகங்கைமண்டலி யிலங்கிடுஞ்சிறு
குடிமுதுகிரியிடை மருதொருகூவ மாடானையதிகைவிய
லூர்கோளிலிதினைநகர் மாகாளந்திருக் குடைந்தைபு
னமங்கைகண்டிம யிலைவலிவலமதிள்
செறிகுடவாயில் பேரூரந்
தரத்தரும்புகழ் எறும்பிதென்சிர கிரிகொடுமுடிகயி
லையொடவிநாசி யாரூரறநெறிகரு வூரானிலைநகரமர்
வேதாசல மேவுபண்பினன். ()

ஆமூரென் றுரைத்திடும்பதி வரும்பெருந்திரு
வுடையர்தமையணுகி நலபொதிசோறு தானேகொண்
டளித்தசங்கர னருங்கலம்புனை
மணிதனபரவையி னிடையொருதூத
னூரானிசைகவென வேயேகியகுணநிதி பூபாரந்
தொலைப்பவன்றொரு தனஞ்சயன்பெற விகலறுகணையுத
வியவனவேடன் மாலேகொண்
டடுத்தொர்பஞ்சவ னெதிர்ந்துதந்திடு
மெழிறுகில்புரிகயி றதுகொடுநீவியேயாடல்செய்தனிமுதல்
நாளாதிரையுடையவன் மாமூலந் தனிற்பரிந்தினி
தடைந்துசங்கரி தனயொடுவளைநனி
படமகிழ்சாமி தேனுருஞ்
சடைக்கணம்புலி கலங்கவந்திழி புனறனைநிலவிட
நிறுவியசோதிமீபூதரவிலன்விடையேயூர்தருமிமையவன்
மேதாவியர் நாடுகுன்றிலே. ()

வானோர்கந் தரத்தரம்பெறு மருங்கருங்குழல்
மதிநுதலிருபுரு வமுமிணைசாப மேயாகுந்
திரைப்பெருங்கடல் விடந்தலம்புக
பூமுதுவடுவின்வகிர் குவளையதாக
வேகூறிடவுவடரு கூர்வாள்பொருமிணைவிழி மாவாகுந்
தளத்தசெங்கம லமிந்திலங்கிய முகமிலவிதருமிழ்
நிகர்தருநாசி வாயாமிங்
கினித்தசெங்கனி சுமங்கலம்பெறு

மிடறிசைகுலவியவளேயெனநாளும்நாவாயிவணுரைசெய
மேவாவளேகுழைபுனே காதாகுங் கடத்தகுஞ்சர
மதன்றனன்போல முடிகலசவிணைக
பொருதிடுமொர்சூது தாணுகும்
புடைத்துவிஞ்சிய குரும்பைவென்றிடு தனமணியசலமு
முதுமுறலாகி யாராயினும்மிணைசொல லாமோமகிதலமிசை
போதோமுய மாதரென்றுநேர். ()

மாமோகம் பெறத்தெரிந்தணை கரும்பசுங்கொடி
யெனவிறு துவளிடை விணினிடையாரு
மாமாதின் பெயர்ப்புனைந்துறு
குறங்குநன்கமை தணையெதிர்புயவிணை
யொருகரமேதி லாமாமலர்குலவிய தேமாவினிறு றுதளிர்
ஆமாநன் கனத்துமின்புரை மடந்தைதன்கவி
னரவனவகறரு மொரல்குலெவாறு
நாமேயுங் குறிப்பதுங்குள
மயர்ந்துயர்ந்தவர் இணைநவிறரவரு சிகியனசாய
லேயாவொருபிடியெகி றுமேநடைதனிலிவண் ஆசாரந்
தனைக்கொடன்பொடு பரன்பதந்தனை நினைபவரருவுனே
களைபவர்சால மாமேவுஞ்
சிறப்பினந்தணர் பரிந்தநெஞ்சினர்
தமைமயல்கொடுசெல வகலிடமீதி லேகோடியசெயல்புரி
வார்தாளணி மலரொரு போதேமன
லாடலின்றியே. ()

தேனேயுஞ் சொலேச்சொலுங்கிளி யருந்தவஞ்செய
வருமொருதிருவென வெவருமுசாவ வேகாமன்
றனுக்கரும்பென நலம்பெறும்பெடை
கரிசறுபதவிய லறுபதமான
சீகாமரவிசைபயில் காரார்குழல்வனிதையர் மாமாயங்
தவிர்த்தவிஞ்சைய னிவந்திணங்கிய புலவருளமகிழ
திகயகுணுளன் நாடாளுந்
திறந்தரன்புறு ப்ரசங்கனிங்கித

னமலனடிபரவு நரையடைசீலன் ஆறுமையினிலமிசை
யேசீர்பொதுளியகதி தேசாருஞ் செழித்ததிண்புய
னகண்டசம்ப்ரம சரசவிதரணச
கலகுணமேரு மாமரகங்
கனித்தபுங்கவ னிரும்புரந்தா னருணகிரணநவ
மணிமயக்ரீட மாறுபரணனதிவி வேகானுகுலனிதயன்
யாதாநமை மேவியின்றுநீ. ()

சீர்மேவுங் குணத்துநந்தனு லனந்தசொன்மறை
முடிபுசொலரியதொர் பொருடகவோரு மீதானன்
கணக்கறுங்கலை விதந்தெரிந்திடு
குசைநுனியனையதொ ரறிவினனீதி
தானேவறுமிலைமையின்மாமேருவையணையவன் ஆசேகுந்
துரைத்தனஞ்செயு மனங்கொளும்புரை யறுநெறியினனணி
பெறுதிருவாகன் ஈரேழுன்
நெடுத்தியம்புல கினுஞ்செலும்புகழ்
கிளரியவுரமுடை யவனிசைசாரு நாலோதியநடைமிக
வேதேறியவணிமையன் கூர்வாய்வெஞ் சினத்தகங்கணை
தருஞ்செழுஞ்சுடர் மருவயிலுருகர
னறுமலர்மாலை யாவேயுந்
திணித்ததிண்புயன் மருந்தெனுந்தகை மையையிமை
பவன்வெகு மயலினில்வாடி ஞையினுமிதுசொல்
வேயாயினனினியெவன் ஏகாயென
வோதிநின்றதே. ()

முற்றிற்று.

---

திருப்போரூர்

# ஆண்டவர் வண்ணம்.

தானத்தந்தனந் தானத்தனதாந்தந் தானத்தந்தனந்
தானத்தனதாந்தந் தனனதனந்தானந் தனனதனந்தானந்
தந்தத்தன தந்தத்தன தந்தத்தன
தந்தத்தன தந்தத்தன தந்தத்தன
தையத்தனதான தனனதனதானன தனந்தன.

பூமிக்கின்புதவுங் காரிற்பொலிவான்சங்
காழிப்புங்கவனுங் காதற்சசிகாந்தன்
சொன்மறைமுன்தேரும் தொன்மைசிறந்தோனும்
புந்திக்குளி யைந்தெட்டுணை
யுந்தட்டற நின்றற்பொடு
சிந்தித்தனர் வந்தித்திடு
வெள்ளிக்கயிலாசர் நாலெட்டுந்தருமம்
பாரிற்புரிவான்பண் டார்வத்தும்பரொடுஞ்
சீர்கச்சியுளார்ந்தங் கெண்ணிலிகந்தேறுங்
தண்ணளிதந்தாளும் பண்பிற்செயு
மன்பிற்குயர் செங்கைக்கிளி
யஞ்சொற்பரை மஞ்சிற்குல
வும்பொற்கிரி வல்லிக்கொருபாகர்
பூசித்தன்பர்களும் போதத்தவமாண்பின்
பேறுற்றந்தணரும் பாசத்தடைநீங்குஞ்
சின்மயசம்போகந் தன்னுபரந்தாமம்
பொங்கத்தொடு ணர்ந்தெப்பொழு
துந்துய்த்திட நண்புற்றணு
குஞ்சொற்ப்ரண வம்பெட்புறு
சையத்துறைநாதர் கனகமணிபூஷணர்
தருஞ்செவேள் ()

பூசைக்கிந்திரனுளங் தேறிச்சனைதோய்ந்தன்
பாயத்தண்சுனையின் போதுற்பலமூன்றும்
பன்னுதினந்தோறும் பொன்னடியின்சூடும்
தொண்டுட்கொடு சிந்தைக்குளு
வந்தர்ச்சனை முந்திச்செய
என்றைக்குமி ருந்துற்றருள்
செல்வத்தணிகேசன் நீலப்பைஞ்சுனையின்
பாலச்சுரர்வேந்துந் தாலத்தண்டர்களுஞ்
சாலப்பதினென்கென் றெண்ணுலகந்தாமும்
புண்ணியநன்றுகுந் தஞ்சத்திய

லும்பற்றுற வந்திச்சைந
யந்தற்புத கஞ்சத்துத
யம்பெட்பொடு செய்வித்தகசேயன்
பூவிற்பொங்குமணம் போலத்தனியாண்டுங்
கூடித்தங்குநலங் காணற்கரிதாம்சம்
புன்மைமறந்தோதும் பொய்ம்மைகொளுஞ்சூரன்
சிங்கத்துமு கன்சித்ரக்ர
வுஞ்சத்தொடு தந்தித்தலை
யன்கொட்பற வென்றிட்டதொர்
கையிற்படைவேலன் பரிவுளகணேசர்
மகிழ்கந்தவேள் ()

சேமப்பைம்பொனெடும் பாரக்குவடோங்குங்
கோலக்குன்றைநகுஞ் சேவற்கொடிவேந்தன்
தெண்ணிலவங்காலும் தண்மதியஞ்சாலும்
சங்கப்பணி லந்தத்தலை
யுந்தத்தழை கண்டற்புதல்
அண்டித்தவழ் செந்திற்பதி
வள்ளற்குமரேசன் சோதித்திங்களுடன்
கூடிக்களிபாம்பும் சூழச்செஞ்சடையின்
கானிற்புனல்தாங்கும் பண்ணவர்முன்பரும்
விண்முழுதுந்தாவும் பைங்கட்கல
பந்தொக்கவி ரிந்திட்டுவ
லஞ்சுற்றிவ ரும்பச்சைநி
றம்பெற்றொளிர் தெய்வச்சிகியூர்தி
தேவர்க்கைந்தருவும் பூணிற்செறிகூர்ங்கொம்
பாசைக்குஞ்சரமும் சீர்மற்றுளபாங்கும்
தம்மிறைகொண்டாளுஞ் செம்மைபெறுங்காலம்
தங்கட்குற வெண்கைக்கரி
தந்துய்க்கவ ளர்ந்திட்டரு
ளும்பொற்பிடி மங்கைக்கெழில்
வள்ளிக்குமணாளன் கனிதமிழ்சபாபதி
சொலும்பிரான். ()

சேணிற்சந்ததமுங் காலைக்கதிர்காந்தும்
கோடிச்செஞ்சுடர்வந் தாலொத்தொளிர்சேந்தன்
பன்னிருதிண்டோளன் தென்னணிசெங்கோடன்
சந்ததமிழ் விஞ்சைக்கதி
பன்சற்குரு வின்பப்பிர
சந்தூற்றக டம்பிற்புனை
செவ்வித்திருமார்பன் வாகைச்சந்தனசிந்
தூரத்தொடுகோங்கும் கோடற்குங்குமமும்
பாளைக்குலையீந்தும் புன்னைவயங்காரம்
சொன்னநறுந்தேனும் சிந்திக்கன
சந்திக்கிரி
நின்றித்தரை சந்தித்தனு
வுந்தற்குறை வின்றிப்பெரு
வெள்ளத்திமிழ்பாலி சீதத்தெண்டிரையின்
பாளித்திலமீந்தும் தேனுத்தந்திடனன்
றுயித்திசைவாய்ந்தும் பெண்ணையினுந்தாய்தென்
றெண்ணகிதஞ்சூழும் துங்கப்பதி
யெந்தத்தவ ருஞ்சித்தர்க
தருபோரி கருமுகிலுலாவுவரையின்கணே. ()

## பெண்கலை.

காமத்தின்கலகங் கூறிச்சமர்தூண்டுங்
கோவைப்பஞ்சசரம் போடத்தனிவாங்குங்
கன்னலடுஞ்சாபன் தன்னுளுருவந்தேறுந்
தந்தக்கய மென்றுட்குற
எண்டிக்குநி றைந்தெப்புடை
யுந்தைத்துநெ ருங்கிச்சொல
எல்லைக்களவாமல் முடிக்கொண்டுகொடும்
பாவப்பயிரோம்புங் கேதத்தென்றுமகங்
காரித்தெழுதீங்கும் புன்னெறியுஞ்சூதுங்
கண்ணுமனம்போலும் பந்தித்தும
யங்கப்புவி யுஞ்சொர்க்கமு
நுங்கிக்கிளர் கங்குற்பொழு

திங்கொத்தலர் அல்லிற்கனியாமம்
காணக்கண்திருகும் பாடுற்றிமைகூம்பும்
தேவர்க்குஞ்சொலவுந் தாமெப்படிதோன்றும்
கன்மமிகுங்கோளன் சென்மபயந்தீரும்
சந்தர்ப்பமும் உண்டுய்த்திட
என்றுட்கொள வுந்தக்கதி
வஞ்சத்திமி ரந்தப்புவ
தெவ்வர்க்குமொணாது வன மருவியாளியுமியங்குமால். ()

காளிக்குந்திகிலுண் டாகச்சொலுங்காந்தம்
சாரப்பண்டுபெயுஞ் சோனைப்புயல்போந்தன்
றென்னவிரைந்தீரங் கொண்முமதம்பாயும்
கும்பத்திணை வெங்கட்பக
டும்பற்றெருகை பம்பிக்கொடு
சண்டப்ர சண்டத்தெதிர்
மல்லிட்டமராடும் சாடப்பிண்டுமனம்
பேதித்தடலோய்ந்தும் போருக்கஞ்சிவிழுக்
தோலிட்டடிசாய்ந்தும் பனம்ருகமுஞ்சோரும்
பின்னமடைந்தாகம் புண்பட்டுமு
றிந்தெய்த்தக முஞ்சொக்கிந
டுங்கப்பொரு சிங்கத்திர
ளினகெர்ச்சனை கொல்லத்தரமேது
காதத்தும்படருங் கோபப்புகைகான்றும்
சேதித்தும்பொழியுஞ் சோரித்தசைமாந்தும்
சுன்னமிடுஞ்சோரன் தன்மையெ
னுங்கோரங் கண்டெத்துணை
வன்கட்பகை யுஞ்செற்றபெ
ருங்கொற்றவ ருஞ்சித்தம
தஞ்சத்திரி சள்ளைப்புலிகோடி
வழிவருகிலேசமெனகொஞ்சமோ. ()

நேமிச்செங்கையினன் தானப்புவிவாங்கும்
போதிற்சிந்துருவம் பாரித்தகிலாண்டங்
கண்மிசையும்போதந் தண்மிளர்ந்தேயம்

புங்கப்படி வங்கட்புல
முன்புக்கென நின்றட்டதி
கந்தத்துமெ ருங்கத்தொடர்
கல்வெற்பும்நேகம் சாரற்கண்பரவுஞ்
சோலைக்கிளிபோன்றஞ் சாமற்றுன்றினர்நெஞ்
சீடற்றிடவூன்றுங் கன்னியர்சஞ்சாரம்
பண்ணியிடுஞ்தாவங் கொஞ்சத்தில்
டங்கத்தரம் அன்றெப்புற
மூந்துட்டம்ரு கங்கட்கொர்ப
துங்கற்கிட மொல்லைத்தருகானம்
நேருற்றங்குடலிங் கோடித்திசைதாண்டுங்
கூர்மைத்தம்பெறியுஞ் சோரட்டொழினோர்ந்திங்
கென்னெனவம்பாகுங் திண்மைசெயுந்தீரம்
கொண்டத்துறை வந்திட்டவர்
தம்பட்டிமை வஞ்சத்துள
மூந்தக்கொலை மிஞ்சிப்பிரி கள்வர்க்குறவேது
இனிதல இராவருதலன்பனே. ()

நேரத்தொன்றுடனென் றாடிச்சமமூண்டண்
டாமற்சென்றுபடிந் தாழப்புனனீந்தும்
கண்ணனலங்காலுந் துண்ணெனவுஞ்சீறுங்
கனறிப்புன வின்கட்படி
செந்துக்களை அங்கத்துடல்
துண்டிக்குமி டங்கர்த்தலை
துள்ளத்திரைமோதும் ஆறச்சங்களவுண்
டேகத்தடையாந்தன் சார்பிற்பின்துணையும்
போதற்கில்லபாங்கன் தன்றுடனுஞ்சேர்வின்
றின்னணமிங்கேகுந்தொந்தத்தைநி
னைந்திட்டிடி லெங்கட்கும
னந்தத்துற லன்றித்திட
மெந்தப்படி கொள்ளத்தகுமேலும்
நேசித்தின்றளவுந் தேடித்துயர்கூர்ந்துன்
காவற்கொண்டுறையுஞ் சூளுற்றனைவேண்டும்

பெண்ணமுதுந்தானெந் தின்னலுறுங்காணின்
சங்கத்தெதவை யுங்கற்றவர்
தங்கற்பல இந்தத்துணி
வென்சொற்றிட நங்கைக்குமிட
துள்ளச்சகியாது இறையுமடமானினிபிரிந்திரான்

விருத்தம்.

பங்கமணிபூஷணர்தருஞ்செவேள்
பரிவுளகணேசர்மகிழ்கந்தவேள்
கனிதமிழ்சபாபதிசொலும்பிரான்
கருமுகிலுலாவுவரையின்கணே
வனமருவியாளியுமியங்குமால்
வழிவருகிலேசமெனகொஞ்சமோ
இனிதலவிராவருதலன்பனே
இறையுமடமானினிபிரிந்திராள்

முற்றிற்று.

---

## திருப்போரூர்
## சுழியிலாவண்ணம்.

தானதனந்தன தானதனந்தன தையத்தாத்
தானதந்தன தானதனந்தன தானதனந்தன
தையத்தாத் தானதந்தன தத்தத்தா
தாந்தனத்தன தத்தத்தா தாந்தனத்தன
தாந்தனந்தன தாந்தனந்தன தாந்தனத்தன
தாந்தனந்தன தனதனதனதன தனதனதனதன
தனதனதனதன தனனதந்தனதான
தனதானத்தன தானதனதனதந்தன.

பூமிசைதங்குயிர் யாவையமுன்பருள் தல்லிக்காஸ்
ஞானசுந்தரர் மாதவர்கண்கவி கூறநயந்தணி

தில்லைக்கூத் தாடுசங்கரர்
பத்தர்க்கா ளாந்தரத்தினை
நத்திச்சூற் மாந்தருக்கருள் பூம்பதங்கன
காம்புயம்புரை சாந்தர்மின்சடை தாங்குகங்கையர்
புலவர்பரவவட நிழலிலமரவரு
குரவர்பதுமமணி வண்ணமங்களநாதர்
தாரணியண்டச ராசரமுந்தனி யுய்யக்காத்
தாளுமம்பிகை பூரணியந்தரி ஆதிதிரியம்பகி
வையகத்தார்க் காகமுன்தன
சத்திக்கார் காஞ்சியுட்டரு
மத்திற்சார் பாம்பயிர்த்திரள் தான்பணும்பரை
யாங்கனங்குழை தாழ்ந்திறைஞ்சினர் வாழ்ந்திடுங்கதி
தரும்அவயவரத கரதலதிரிபுரை
புவனைமலையுதவி கன்னிபங்கினிவாசர்
பூசலிடுங்கட மானுலவுங்குடி லில்லித்தாய்ப்
பாடிவந்தினி தானிரையின்குழ லூதியுவந்தடர்
புள்ளைச்சாய்த் தாழ்வுறும்பல
புற்றிற்பாய் பாம்பினத்திரள்
பட்டுத்து ளாம்படிப்படர் வீங்கிடுஞ்சிற
காங்கருந்திசை தாங்குதந்திகள் நீங்கிவிண்டிட
விசைமிகுகருடனில் இவர்முரகரிமுத
லியநவவடிவினர் அண்ணலங்கனதியாக
கயிலாசர்க்கினி தாகவருதிருமைந்தனர் ()
பூதியணிந்திடு சாதனர்தந்துயர் கல்வித்தூய்த்
தாருநிம்பந ளீழலமர்ந்துறை யானைமுகன்றனை
யுள்ளத்தாற் பூசைதந்துசு
வைக்கப்பா லாம்பிரக்கனி
வைத்திட்டார் தாழ்ந்துசுற்றினர்
பூண்டஅன்பினி லாழ்ந்துபின்புடை சார்ந்துபண்பினி
லான்றசிந்தையில் இணையடிபணிபவர் நிலையுறமனதினில்
நினைவரமதுதர முன்னிடுங்குருசாமி
தாருகனுங்கடி தானக்ராவுஞ்சமும்

அல்லிற்கூட் டாகமுந்தரி மாவதனன்கிளர்
பானுவியன்பகை மல்லுக்காற் றுதழிந்திட
மட்டற்று ராம்படைக்குல
முட்டிக்கூர் நாந்தகப்படை
சார்ங்கமம்புகை தாங்கிமுன்பமா மூண்டயர்ந்தது
தான்பரிந்தமர் தனியிடசுரனுட லிருதுணிபடவிடு
மிருதலையயில்வல மனனும்அங்
கைவிலாசர் பூசுரருஞ்சுர
ரானவரும்புகழ் வள்ளறகிற் றுரும்அம்புயர்
யானையுடன்குற மாதுமணந்தவர் குலலைத்ததார்ச்
சூடுமுந்தையர் புக்குற்று
றும்படிதத்ல முற்றுத்தா
மீண்டியற்புத சாந்தமிஞ்சிய வான்பதந்தனை
நீங்கருந்திறல் வாய்ந்துகண்டவர் அகமகிழ்வுறவணு
கிடுபசியகலப நடனமயிலில்வரு
வண்மைதங்குமுலாசர் கலைஞானத்
திருவாளர்மணதுறைகந்தனர் ()

நாமகளுந்திரு மாமகளுந்தரு கல்விக்கூட்
டானவிஞ்சையும் ஈகையுறுந்தன தானியமுங்கிளர்
மல்லற்கூப் பாமநந்தமும்
உச்சிப்பா தாம்புயத்துணை
வைத்துக்கா ஓன்றியத்துணை ஞான்றிறைஞ்சிடி
லீந்திடுந்தகை சான்றகண்சுனை மூன்றருவகடி
மலரவிழ்மணிமுடி வளர்தமனியசின
கரநிறைதணிகையில் உண்மைமந்திரபுராணர்
மானவகந்தைகு ரோமனங்கவர் சள்ளைக்கூட்
டாளியைம்புல னீடியவிந்திர ஜாலபயம்படு
பள்ளத்தீர்க் காயல்நந்தமை
மித்தைக்கூ றும்பவக்கட்
இக்குட்டாழ் தீங்ககற்றிய வாம்சுகந்தனி
லார்ந்தமைந்துறை பாங்குகண்டரு ளேன்றிடுந்தின

மணிசரவணபவ முருககுமரகுக
பரமபகவசிவ சின்மயந்தருதூயர்
நாகர்வணங்கலை வாய்தனை அண்டினர் கவ்வைத்தாழ்த்
தீயவன்பிணி தீரநகும்பழ நாசலமுங்கித
வையைப்பாற் சீர்பரங்கிரி
வித்தத்தா தாம்பல்நற்சத
பத்ரத்தா டார்ந்துதிர்த்திசை பாண்புரிந்தளி
தூண்டிமன்றலி னூண்பயன்கவர் சூழ்ந்ததண்டுறை
நறைதவழ் பழதமுதிர்
வனகிரிமுகலியமலைதனிலுறைபவர்
கண்யகந்தகிரீசர் இயல்சூரிஷ்ட்ட சபாபதி
புரிதசிந்தையார்
நாடுவனம்பல யாறுழலும்பழி விள்ளச்சீத்
தாதியந்தமி லாதபரம்பர நாதசுயம்புவை
வில்வத்தாற் பாதபங்கஜ
நட்புற்று ராய்ந்தருச்ச
னையிட்டுப்பா லாம்பிகைக்கியல் காந்தர்வந்தள
மான்பமந்தனை யீர்ந்தபின்பக லாண்டணைந்திடு
சிவமுனிவசமலர் மகள்தனையுதவிய
பிரணவமலையது தன்னில்நின் றுகுலாவு
பாலிநறும்புன லாறுபரந்திட மள்ளர்க்காற்
றுவளந்தரு சீலமுயர்ந்தது நூலையரிந்துணர்
ஐயர்க்கீட் டாயமைந்தது
பற்றற்று ராந்தவத்தினர்
நிட்டைச்சூ ளாம்பலாத்தினை வாய்ந்தகங்கைபி
லீண்டிடும்படி காண்புறுங்கன காஞ்சியம்பதி
மதிதவழ்கழுமலை மயிலைநகரமுத
லியபலபதியுடை துன்னுதொண்டைநனாடு
ஞானவியன்கதிர் வீறுசிதம்பர துல்யர்க்காத்
தூயநன்குரு வாகவருந்பதி தாமமணங்கிளர்
கள்ளைக்காத் தாவிவண்டின
நச்சுற்றாழ் தூங்கிசைக்குர

விட்டுத்தார் வீழ்ந்தடுத்துண வான்சலஞ்சல
மூர்ந்துபைங்குலை ஞாங்கர்தங்கரு வீன்றிடும்பணை
மருவவுனதமணி மயகனகசிகர
முயர்சமரபுரியு ளிங்கிலம்புகழ்பாடி
இனிதாகக்களிகூர வருமலையின்கணுள். ()

## பெண்கலை,

மாமதனன்கஜ மாகியதுன்றிருள் அல்லைப்பாற்
றுமுனங்கரு மாலையிகழ்ந்தணி நாவிம—ங்கமழ்
மவ்வற்பூச் சூடியஞ்சன்
மத்தித்தாய் சாந்திழைத்தகி
லுற்றுத்தாழ் வார்ந்தமைக்குழல் ஈர்ங்கரும்பினை
வாங்கிடுந்தநு ஊன்றுபண்பினில் நீண்டசிந்துர
மதிநுதலுடனில கியசிறுபிறைநிகர்
இருபுருவவழகு தம்மில்நின்றசமானம்
ஊசலிசைந்தன வாகவிளங்கி யவள்ளைச்சீர்த்
தானவண்குழை மாரனடுங்கணை யாழ்கடலம்புய
நையக்கூற் றுனதஞ்சியு
ளச்சத்தால் தான்களைத்தக
மக்கிக்கால் சாய்ந்திளைத்திட ஊன்படுந்திணி
கூர்ந்தகுந்தமு னைகடும்படை சாம்பிநைந்திட
உயர்குவளையினலர் அரிபரவியமதர்
விழியிணையினுவமை புன்னிடும்படியாது
வாகுறுநன்குமிழ் நாசியரும்பணி முல்லைப்பூப்
பாயிணங்கிள மூரலருந்திதழ் வாயதுகிஞ்சுக
மல்லத்தீப் பானகண்டது
கட்டிச்சா றும்சருக்கரை
முற்றுப்பா டார்ந்தமுக்கனி கான்றிடுஞ்சுவை
தாந்திரண்டுரு மாண்புறுந்தகை ஈண்டுவந்தன
வளமலதிலையதில் வருமினியலலித
உசிதவசனமது கன்னலின்சுவையூறல்
வியனார்தத்தையு நாடுநயவுரைமுந்துவாள் ()

வாலியசங்குப மானதரங்களில் உள்ளக்கூட்
டாதகந்தர மாசில்பசுங்கழை வாருதழைந்திரு
கையைப்பார்த் தாசிலங்கிரி
சுற்றிப்பாய் காந்தணற்றவ
மூற்றுத்தா ஞங்கிழைத்தது மூற்றினங்குலி
யான்றகன்றழ கார்ந்துமஞ்சுளம் வாய்ந்துபுன்சிரை
வடுசிகுரமகல வளரிளவடிவினில்
இலகியதசைவுறு வன்னமிஞ்சியமார்பு
கார்தவழுங்கிரி சாயகிமிர்ந்தடல் தள்ளிக்காட்
டானைகண்டடர் தானிலுறைந்திட வாதுபுந்திரிகல்
வல்லைச்சாய்த் தீடறும்பகை
வைத்துக்கா மாந்தரைப்பணி
யிட்டுகாழ் பூண்துசிற்புனை காஞ்சனந்திகழ்
தீங்குரும்பையின் வாங்கிடும்படி மணம்ருகமதபுள
கிதபுநுகுகளப மணிதனதடமிறை
கிண்ணமும்புறமாகும் வாரிவலஞ்சுழி
யாளியனநதிய தையத்தாற் காணருஞ்சிறு
நூலிடைகண்டது கூறவருந்தக வில்லுக்காயக்
கவரம்பையு மத்தக்கார்
மான்துதிக்கையும் வைத்திட்டா
லாந்தழைத்தக வான்பசுந்தளிர் ஆய்ந்தபஞ்சுறழ்
பஞ்சதங்கைகள் சார்ந்தகிண்கிணி மலரனமிடுகுரல்
இசையினுநயமுர முரலடிமரவல்
தன்மைநன்றிசையாக மிகுசாயற்
கிணையாடுமயி லியல்விந்தையாள். ()

காமர்சுரும்பினர் நாரிகரும்படல் வில்லிற்பூட்
டரமலும்பல வாளிகள்அங்கச பாவிதுரந்தவை
கவ்வித்தாக் காமலுந்திரை
தத்தீக்கி ழாந்தனமக்கடல்
உட்கக்காய் வாங்கஓர்க்கனல் காந்துதிங்களும்
ஆங்கணன்றிலும் மாங்குருந்தைய வாங்கருங்குயில்

கனுமிடையிடைதுயர் புரிவதுதடைபட
மனமிசையவிரக கந்நதங்கனிவாக
ஆவலுறுர்துணை யாகவிருந்தினி அல்லற்றீர்த்
தாளல்தண்கட ஞதலறிந்தன ளாசைமிகுந்தனள்
புல்லத்தாழ்க் கமாவின்பவ
ளத்திற்சீர் தூண்டுசித்திர
குத்துக்கால் தாங்குநித்தில
மாந்திமிஞ்சிய தாஞ்சரம்பல பூண்டபஞ்சணை
தூங்குமஞ்சமி தணிமடவனநிகர் வுறவருதலுமிடை
தளர்வுற்விருதனம் விம்முகின்றதுகாண
காதலரும்புவ தாழியினுந்தவ
அல்லிப்பூத் தானமவங்கையும் நாடுசவுந்தர
ரூபஅணங்கவிர் கிள்ளைப்பரர்ப் • பாருமங்கையள்
கற்றைத்தூர் சாந்தமட்டவிழ்
புட்பத்தார் கூந்தலிட்டனள்
காண்டகும்பளி தாங்கருங்கும மாங்கதம்பமும்
ஆங்கணிந்தனள் கரவளைகலகல இசைமுரலநயன
அபிநயநவில்குறி பண்ணிநின்றுறவாகி
மயல்நீடித்தளதாகிநிகழ்வுறுசிந்தையாள். ()

காரிகையிந்தவி லாளிபுயந்தனில் அள்ளிப்பூச்
சாடுசந்தனம் வீகியுவந்தனள் வாயிதழ்தந்தனள்
கள்ளச்சூட் டானவிஞ்சைகள்
கற்புத்தா ழய்ந்தமட்டள
வைக்கற்றூர் காண்பதற்குவர் காந்தயமுந்தய
முண்டமைந்திடு மாண்பிணஙகிய தியண்டசங்கிடும்
அளவலிகரிகர கரணவகைகள்பல
விதமுளகுறிமுதல்உண்ணுமின்பமுளுறி
சாதிசுரங்கள்நி தானவணங்கமணி மையற்பாட்
டானசிந்துகள் பாடலியம்புவள் சீரியமந்தர
சையத்தாற் சாரவந்துசு
வர்க்கத்தார் மாந்துபுத்தமு

தத்திற்பா கூர்ந்தஇச்சுக மாந்தர்தங்கிய
பாங்குறும்புவி ஈங்குகண்டிட பான்புரிந்திடு
தவபலனிதனிணை முனிவரர்மறுமையில்
அடைசுகநிகரல பன்னுசந்திரசூரியர்
காணஇருந்திடு காறுநயந்தவள் உய்வைத்தூற்
றுதிணங்குவள் காமநலம்புரி சாடையறிந்தனள்
பையைப்பார்த் தூடிராஞ்சித
கச்சுக்கூ டார்ந்தசக்கர
பக்ஷித்தா ணீந்திணைக்கையில் வாஞ்சைதந்துகை
தாங்கிநன்கினி சாஞ்சலங்களை நீந்திடும்படி
கலவியமுதநிலை சுரதவிபவகன
சரசசுரதநல முன்னுசம்பிரமலீலை
வளமாருக்குரை யாளவிடுவலனுண்டுதான். ()

விருத்தம்.

கயிலாசர்க்கினிதாகவருதிருமைந்தனர்
கலைஞானத்திருவாளர்மணதுறைகந்தனர்
இயல்கூரிஷ்டசபாபதிபுநிதசிந்தையார்
இனிதாகக்களிகூரவழமலைலன்மணாள்
வியனார்தத்தையுநாடுநயவுவாமுந்துவாள்
மிகுசாயற்கிணையாடுமடவியல்விந்தையாள்
மயல்நீடித்தனதாகிநிகழ்வுறுசிந்தையாள்
வளமாருக்குரையாடலிடுவலனுண்டுதான்.

முற்றிற்று.

---

# மெல்லிசை வண்ணம்.

இராகம்—சஹானு—ஆதிதாளம்.

தாந்தந் தந்தந்தந் தந்தந்தந் தந்தந்
தாந்தந் தந்தந்தந் தந்தந்தந் தந்தந்
தையனதந்தந்தந்
தையனதந்தந்தந்
தந்தந்தந் தந்தந்தந் தந்தந்தந் தந்தந்தந்
தந்தந்தந் தந்தந்தந் தந்தந்தன்—தான
தந்தந்தந் தாந்ததன தானனு.

வேந்தன் பொங்கன்பன் பண்பொன்றுஞ் சந்தஞ்
சேர்ந்தென் றுந்தம்பங் கொண்டின்பங் கந்திங்
கெவ்வுயிருந்தொண்டஞ்
செய்வகையுந் தங்குஞ்
சொந்தன்பந் தும்பந்தந் தன்பங்கின் பந்துன்பம்
மங்பங்கந் தொந்தம்பின் பொன்றுந்தொட ராத
சாந்தன் பண்டங்குஞ் சந்தங்கொண் டென்றுந்
தேர்ந்துங் கண்டுகொண்டுங் கண்டம்பன் துங்கஞ்
சொல்லரிதெங்கெங்குந்
தொல்லரி தந்தந்தெண்
சிந்தம்புங் கம்பங்கிந் தென்றுகஞ் சங்கொஞ்சுஞ்
செங்கண்சண் டன்றுன்றுங் கங்கின்கண ராகி
வேண்டும் பொன்குன்றுங் கொன்சங்கின் சிந்துந்
தாங்குந் தன்செந்தண் டங்கொண்டுங் கண்டஞ்
செய்யுமேனண்பன்கண்
டுய்யணிநண்கின் பைங்
கந்தஞ்சிந் துங்கொந்தின் சந்துந்தும் பண்டங்கும்
பண்டங்கன் கந்தின்றண் டுங்கங்கனி காலும்
உண்டின்பமேய்ந்தமறைமூலமே.

மீன்பம் பிந்தொன்றுந் தொண்டின்றெண் டம்பன்
சேந்தங் கங்கொண்டென் றும்பொங்குஞ் செங்கண்

செய்யினனுங்கெஞ்சுந்
துய்யொளிவும் புஞ்சம்
பங்கின்கிண் டுங்கஞ்சஞ் செம்பஞ்சும் பின்பஞ்சுரர்
தஞ்சம்பம் புந்திண்டன் சந்தந்திகழ் பாதர்
ஆன்கன் றுந்தண்டும் பொங்குன்றுந் துன்றும்
பாம்பும் பங்குந்தண் செங்கன்றுங் கண்டுந்
தெள்ளுரைவிண்டுந் தங்
குள்ளுறவுங்கொண்டண்
டும்பண்பொன் றுண்கண்கொண் டன்புந்தஞ் சந்தந்துஞ்
சொந்தந்தொந் தம்பந்துந் தந்தம்புரி நீதர்
வேம்கந் தம்பண்டஞ் சுண்டுந்துண் டங்கொண்
டுன்கண் டம்புந்துஞ் சும்பண்பின் றின்றும்
பெய்துறுநஞ் சொன்றுஞ்
செய்திலவன் றின்றும்
பொங்குந்துங் கந்தங்குங் கொங்குந்துங் குஞ்சந்
தொங் குந்திண்கந் தொறும்பண் பந்தம்புய நாதர்
ஒண்பண்களாய்ந்தகுணசீலராம்.

காந்துஞ் செங்கண்கொண் டண்டங்கெஞ் சும்புண்
டோய்ந்துந் தந்தத்தின் றுஞ்சண்டங் கிஞ்சுங்
கையிடைதண் டம்பும்
பொய்புறை நெஞ்சம்புங்
கங்கந்துன் றுங்குந்தம் பங்கம்பம் புங்கந்துந்
தின்றென்புங் கண்டங்கம் பங்குந்தயி லாளர்
ஏய்ந்துஞ் செந்தந்தங் கும்பஞ்சங் குன்றும்
பாய்ந்தெங் குங்குநதும் பந்தின்திண் டுன்றுங்
கொய்யுளையும் பைம்பொன்
செய்யிரதங் கொண்டுஞ்
சிந்தென்றண் கிம்பங்குண் டுண்டும்பண் டுந்தும்புன்
கண்டங்குங் கண்டங்கொம் புங்கொண்டல் வீரர்
காண்டுஞ் சங்கின்சந் தஞ்சென்றங் கயகம்
போந்தண் டம்புண்டும் பின்பொங்குஞ் சிந்துஞ்

சொல்லெறி யுண்டுண்டுங்
கல்லெறியுண் டுண்டுந்
துண்டங்கண் டங்கண்டந் தண்டங்கம் கெஞ்சுஞ்சம்
புங்கங்கங் கெம்புந்தின் றென்றிஞ்சய வாகை
கொண்டண்டர்தாழ்ந்துபுகழ்வேலராம். ()

கான்சிந் துங்தெங்கின் கண்டொங்கும் திண்கண்
யாங்குந் தும்பின்பங் கந்துன்ப கொண்டும்
பெய்முகிலின் றன்கண்
டுய்கயல்வந் தங்கண்
கொங்கின்செங் கஞ்சம்பஞ் சென்றன்பின் கண்டுஞ்சும்
பொன்பொங்கஞ் சம்பின்கொண் டஞ்சுஞ் செறிவாவி
பூங்கொங் கின்கொம்பின் கொங்குண்டொன் றுஞ் செய்கண்
டுள்ளனம்வண்டுந்தும்
புள்ளொடு சங்கும்பம்
புங்கங்கெங் கும்பங்கின் பங்கஞ்செம் பின்புஞ்சஞ்
சொண்டின்கண் கொந்துந்தந் தங்கொஞ்சறு நாரை
கான்கொண் டுங்கண்டன் கொண்டுங்கிந் துஞ்சஞ்
சேண்கொண் டும்பந்தங் கொண்டென்றும் பொங்கு
செய்மதினஞ் சொந்தங்
கைபுனைசம் பந்தந்
தஞ்சங்கொண் டென்றுந்தன் கண்கொண்டொன் றும்பஞ்சம்
புன்கண்சென் றெஞ்சும்பொன் பொங்கும் படியாளும்
கொங்கங்கமோங்குமகு மூதாரம். ()

சாந்துஞ் செஞ்சந்தங் கொந்துந்துங் கஞ்சம்
போன்றும் பொன்கும்பம் பைங்குன்றும் பந்தும்
கைமலையின் தந்தம்
பெய்மலரின் புஞ்சஞ்
சென்றொன்றுந் தண்கெந்தங் கெம்புந்திண் டெங்கின்கண்
புனபிஞ்சுங் கண்டுஞ்சும் பண்பின்றனபாரம் தாங்கும்
பொன் கொம்புஞ் செங்கண்சிங் கங்கந்

தேய்ந்தும் பின்பிந்துஞ் சென்றுஞ்சுங் கொஞ்சங்
கைபிடையுண் டென்றும்
பொய்யிடையுங் கொண்டுஞ்
செந்தங்கம் பண்பங்கங் கொண்சங்கம் பண்கண்டம்
பொங்கின்பந் துஞ்சுஞ்சுஞ் சந்தங்கிய சாயல்
தாண்டும் பங்கம்புஞ் செங்குந்தந் தண்டன்
பூங்கஞ் சம்பிஞ்சும் பங்கங்கொண் டெஞ்சுங்
கள்ளமுநஞ்சுஞ் சிண்
டுள்ளனவுந் துன்றுங்
கண்கொண்டுங் குஞ்சங்தொங் குங்கொங்குஞ் சென்றெங்குந்
தண்டந்துந் தும்பந்துங் கொந்தின் குழலோடு
கண்டின்பமோங்குமொழிமாஞர். ()

தாழ்ந்துந் தம்பஞ்சம் புண்பங்கந் துன்பம்
போழ்ந்தின் பங்கொம்பும் புன்றந்தம் பம்புந்
துய்நகையின் சந்தம்
பெய்நகையன்புஞ்சிக்
தும்பண்பின் பின்கொஞ்சுங் கொண்டொண்செண் டுந்தந்தந்
துன்றஞ்சக் கண்கொண்டன் பின்றந்தினி தாளும்
காந்தன் பண்டன்றுங் தொந்தந்தன் பங்கின்
பாங்கின் றுங்கண்டொன் றுங்கொண்கன் சொந்தங்
கொள்விதியென் றங்கந்
தெள்களிகொண் டண்டும்
பொன்றுஞ்சும்பெண்கொம்பென் றெஞ்சும்பின் கண்கொண்டம்
பென்றெங்குஞ் சென்றுந்துந் துஞ்சும்படி யேவும்
தாந்தந் தணகண்டம் பொன்றுண்டம் கொண்டும்
பாண்டுசெஞ் சந்தந்துன் றின்பந்தந் தும்பின்
புள்ளுருகும் பண்புங்
கள்ளதாரந் தந்தும்
தம்பந்தின் றம்பெந்தின் றஞ்சந்தின் றன்சந்தின்
றங்கொங்கின் றம்பங்கின் றெண்டம்புங் வார்கள்
கங்கொன்றுமாய்ந்தறிவின்மாய்கையார் ()

சேந்தெங் கும்பொங்குங் கண்கண்டுஞ் செண்டும்
பாண்டுங் கொண்டங்கம் பைங்கண்டுந் தந்தம்
செய்தொழி லென்றம்பும்
பெய்தரமுன் கொண்டும்
பொன்குன்றங் கண்டந்தும் செம்பஞ்சின் தண்கஞ்சங்
கிண்கிண்கிண் பண்கொஞ்சுந் தந்துங்கயி லாகை
காய்ந்துந் தந்தம்பம் தம்பந்தம் பென்றுந்
தோய்ந்துந் தஞ்சிந்தந் தங்கந்தங் கந்தன்
கைவரு மென்றுங் கொண்
பொய்யுரை விண்டென்றன்
பந்தம்பந் தம்பந்தந் தெண்டந்தெண் ணந்தெண்டென்
றுங்கெஞ்சுங் கெம்புஞ்செம் புந்தெந்தன மாமுன்
தேங்குந் தொஞ்சஞ்சுங் கண்டஞ்சுந் துன்பென்
றோங்கும் பின்சண்டங் கொண்டொன்றும் பண்பின்
புல்லிமுகந் தன்பின்
கிள்ளையணைந் தும்பஞ்
சொன்றின்றென் றெந்தெந்துந் தண்கெந்தம் பின்சிந்துந்
தொந்தின்பந் துங்கந்தந் தென்றும் புணர்வார்கள்
தொண்டென்று மேய்ந்துதுயர்வீசுவார். ()

தேந்துன் றம்பண்டின் !கண்டென்றுங் கெந்துந்
தேய்ந்தொன் லுந்தந்தம் புண்சிந்தும் பண்டங்
கொள்வெறி நெஞ்சுண்டும்
புல்வலைபந் தின்பங்
கெங்கெங்கும் பங்குண்டும் பின்சென்றுந் திண்டொஞ்சுங்
கண்டுஞ்சுந் தன்சொந்தங் கண்கண் டறியாது
போன்றுங் கொன்பங்கம் பண்கொஞ்சங் கொண்டுந்
தேண்டுந் தண்டண்டந் தன்பண்பொன் றின்றும்
செய்திலனென்றென்றும்
பொய்தலையின் றுந்தும்
சண்டன்கண் டன்றெண்டன் பங்கங்கன் றுன்பஞ்சென்
றின்பம்பந் துந்தஞ்சம் பொன்செஞ்சர ணுகு

தேம்பும் பந்தஞ்சங் குஞ்சரந்தந் தந்தஞ்
சாந்தந் தங்குந்தம் பம்பம்பன் பின்கண்
கையிடையுந் தந்துந்
துய்யியல்புங் கொண்டும்
கெஞ்சுங்கொஞ் சன்பஞ்சம் பொஞ்சுண்புண் பிஞ்
செஞ்சுந் தொஞ்சஞ்சுங் கொங்கொன்றுந் தன்பண்
பினிதாளும் தொங்கின்றிவாழ்ந்தமகுழ்தராம். ()

முற்றிற்று.

---

# ஆண்கலை வண்ணம்.

இராகம்—மோகனம்—ஆதிதாளம்.

தனதன தந்தந் தந்தந் தந்தந் தனதன தந்தந் தனத்த தானன
தனதன தந்தந் தந்தந் தந்தந் தத்தன தந்தந் தனத்த தானன
தனந்த தந்தந் தனனா
தனந்த தந்தந் தனனா
தத்தத் தத்தத் தத்தத் தத்தத்
தானன தானன தானன தான
தானன தானன தந்த தானனா.

மதிகணமென்றுஞ் சென்றென்றுந்தும் பற்பலவண்டந்
தரித்தவானவர் சிவமணிசந்தஞ் சிந்தும்பொங்கம்
பொற்பதியுந்தங் குரித்தின்மாதரு
மெழுந்தகுன்றுந் தொடராய்
வளைந்தசிந்தும் படியோ
டெட்டுத் திக்கொக் கப்பட் டுற்றப்
பாரிடையேநட மாடியபூத
மிடையிடையெங்குந் துன்றும்பண்பின் சுற்றிவிளங்கும்
கணக்கிடாவுயிர் தகையுறுநெஞ்சங் கண்டன்பொன்றும்
பத்தினியின்பங் கொடுக்குநாயக
னனந்தனென்றுந் தனியோ
னினங்கடந்தும் பிரியான்

மற்றொப் புச்சொற் கட்டிற் சிக்கிற்
காணரிதாகிய சோதியினாதி
மணவறைநின்றுங் கண்டுண்டங்கந் தற்புறமுய்ந்துஞ்
செயற்கையாலெழ வருமதனின்பந் துன்பந்தண்டம்
பெற்றிடவென்றுந் தனக்கிலாதவன்
மறைந்திருந்துந் தெளிவாய்
விளங்கினின்றுந் தெரியான்
மிக்குற் றுச்சச் சித்தத் திட்பத்
தாமெழுபேரொளி வாகியநாதர்
மாதவவாருதி முங்குமோலமே. ()

மறைவளமுங்குஞ் சந்தங்கந்தம் புத்தமுதின்பம்
பழுத்தவாயின ரருளெனமஞ்சும் பண்புண்டன்பும்
பெற்றுயர்கஞ்சஞ் செழித்தபார்வையர்
மனந்திகழ்ந்தெண் டிசையே
பரந்தெழுந்தண் புகழே
மிக்குற் றொக்கத் தொக்குப் பட்டுத்
தாமெழுமேரினும் வீறுறைதோளர்
உளமதுவெம்புஞ் சம்புந்துன்பம் பட்டுழல்கங்கங்
கொதித்தபாலையி னதியெனமண்டுங் குண்டுங்கொண்டுந்
தத்தியமிழுந்தும் படிக்குநீவர
வருங்கரங்கொண் டருள்வோர்
பெருந்தவந்துந் துயர்வோர்
மச்சச் செப்புச் சித்தித் தொக்கப்
பேசியகாரண மேவியநீதர்
மயில்வடிவங்கொண் டெங்கெங்குந்தன் பொற்கதிர்சிந்தும்
படிக்குலாவிய முகமதுவென்றிம் பண்பின்புந்தும்
பற்பலசெந்தும் பிழைக்கவேநவ
மிகுந்துமெண்கண் டனிலே
விளங்குமின்றந் தணியாய்
மக்கத் திற்கொற் றத்துச் சுற்றுக்
காவலர்தாடொழ வாழ்மருமூதர்
மாதவமுனி யன்பர்சீலமே. ()

கதிர்தருமைம்பொன் செங்கஞ்சந்தண் புட்பமுலர்ந்துந்
தலைக்கமேகொள மலர்தருமந்தம் பொங்குங்கொங்கின்
கொத்தொளிர்வஞ்சம் பதத்தினையகர்
மலங்களுந்துஞ் சமையா
கமலங்களொன்றுங் கனியா
தற்பிற் சித்தத் தட்பத் துத்சத்
தாடெழுமாமதி யாகியபோதர்
கொடுமையனந்தந் தந்தஞ்செந்தம் பற்பொருளென்றும்
படைத்தழூரிய வடிபடுமம்புந் தண்டுண்குந்தங்
கட்கமுமிஞ்சும் பிடித்தவாயுத
வினங்கள்கொண்டுந் தவுருச்
சினங்கடுன்றுங் கணினுர்
மத்தத் தத்திக் கொற்றக் கற்கித்
தேரொடுதானைகள் வாருதியாகக்
கசடுறைநெஞ்சின் சிண்டும்பந்தங் தட்டிவிளங்கும்
பெருத்தவாயினை னபுசகுலண்டுந் தண்டங்கண்டம்
பட்டுவிழுந்தெண் டிசைக்குளோடிட
வுளங்கனிந்தண் கணமே
சுணங்குகங்குங் கனியே
துய்த்துக் கத்திக் கத்திக் கெற்சித்
தாடிடமீலிய வீரியவேலர்
காதவருனுயி ருண்டவேலினர். ()

கடிகமழ்கஞ்சந் துன்றும்பண்பின் பொற்றிகழ்விந்தம்
பொகுட்டின்மேவிய வனமினமென்றும் பண்கொண்டின்பம்
பெற்றுவிளக்குந் தடத்தின்வாளைகள்
விரைந்தெழுந்தம் பரமேல்
வளர்ந்தசந்தந் தருமீ
தெத்திக் கொத்துப் பிச்சிச் சுத்திப்
பாகமெலாமெறி வாடைகண்மீறும்
வரியளிசிந்தும் பொங்குங்கந்தம் பற்பலவண்டண்
டலைக்குளேவளர் குயில்கிளிகொஞ்சும் புஞ்சஞ்சந்தஞ்
சொற்கள்பரந்துஞ் செழித்ததோர்புய
றவழ்ந்திருந்தும் பலகால்

சொரிந்தவெண்டண் பருமா
முத்துத் திக்கிற் பற்றிப் பெற்றுத்
தாவியபேரொளி வீசியசோலை
கனியினிறைந்தும் பந்தம்பந்துஞ் செய்த்தடமண்டுஞ்
செழித்தசிறிய ரருளும்விருந்துண் டெங்குந்தஞ்
சித்தமகிழ்ந்தன் பக்த்தினோர்பலா
திரண்டரங்கந் தனிலே
செறிந்தியம்பும் புறுக்கரன்
மக்கத் திற்சொற் கத்திற் புக்குக்
கோல்புரிகாமிது மாகுமூதர்
காவலர்தாழ்தருகின்றநீதியார்.

முற்றிற்று.

---

## வன்மெல்லிசை வண்ணம்.

தழிப்பு.

தானன தன தந் தந் தந் தனத்தத்தந் தனத்தந்தந்
தானன தன தந் தந் தந் தனத்தத்தந் தனத்தந்தந்
தனந் தந்தன தனந் தந்தன
தனந் தந்தன தனந் தந்தன
தானத் தனதத்த தானத் தனதத்த
தன தன தன தன தன தன தனன
தனனதன தனனதன தனதன.

தானிகரிலையுண்டென்றங் கவைக்கொப்பின் றிலைச்சுத்தன்
றுனென நிறைவுண்டுந்தங் குமெய்ப்பற்றன் பருக்குத்தந்
திடுஞ்சிந்தையி லடங்கின்றல
னெடுங்கின்றில னடுங்கொன்றில
னுகத்துளாகத்தன் யாவர்க்குமோகத்தன்
அருமறைமுதலொரு பொருளுயர்சோதி
அகநிலைவின்பங்கொண் டொளிச்சித்தம் படிக்குத்தஞ்
செகமுமையங்கணக்கொ டுதிட்டம்பெறக்கிட்டுண்

டமைந்தெங்கணு முறைந்துஞ்செயல்
புரிந்துங்கிர்பை யுவந்தன்புற
வேதிட்டியாகத்தினேன் மெய்ப்பத்தாய்வைத்த
தரளமதொளிமர கதமயில்ரூபர்
சாகரமதில் முங்குண்டும் புவிக்குட்டுன் பறப்பொற்பின்
பரமறைதனை யெங்கெங்கும் படிப்பித்துங் கொடுத்துப்பின்
பவங்கண்டுயர் தவந்தங்கவு
நவங்கண்டவர் களும்பண்பொடு
தாகத்தினன்மிக்க தீனுக்குளாயுற்ற
தவமுயர்பரகதி பெறவருநாதர்
சமையமதிலுதவிபுரி தயவினோர். ()

சாய்கையடி யுந்தங்கின் றிலத்திக்கம் புவிக்குட்சென்
றேகிலறியும்பின் றிறக்கக்கந்தரத்தைக்கொ
டருந்தண்குடை விரும்புஞ்சல
மலந்தங்கில நரந்தங்கமழ்
வாசத்தையேயுற்ற தேகத்தினர்கத்தன்
ஒருபொருள்குறிபுய மதிலுறுநாதர்
வானகமதிலுந்துந்திங் களைச்சொற்கொண்டழைப்பித்துந்
தானிருபிளவுண்டுந்தன் கரத்துட்சென் றுயர்த்திப்பின்
பொருந்தும்படி யுவந்தன்புசெய்
மிகுந்தெங்கணும் விளங்கும்புகழ்
தானுற்றஞானத்தி னோர்மிக்கனோர்நித்ய
மனமிசையொருபொரு டனைமறவாத
தாமரையடி நம்புந்தொண் டருங்குச்சொந்தமுற்றுக்கண்
பார்வையருளன்புகொண் டுயர்த்திச்சிந்தையுட்பட்சம்
புரிந்துந்தப வுவந்துந்தவம்
விளங்கும்படி வரந்தங்கவு
மேபட்சமேவைத்த நேசத்தினோர்மிக்க
தனியவனறுசிடை சிபுசுடனேகு
தருமநெறிபொறையறிவி னிலைமையோர். ()

பானிவமதில்வம்புந்துண் பிடிக்குஞ்சிந்தையில் உற்றுச்
சிந்தேநிகர்குந்தஞ்சிந் தூரத்தைக்கொண்டமர்க்குத்தின்

டியும்பம்பையி னுடன்றம்புரு
நரம்பின்கரு வியுங்கொம்பொடு
மேளத்தோடேடக்கை தாரைத்தடாரிக்கை
மணிபலதிமிலேகடுடி யொடுதூரிக்
காகளமொடுசங்கந்துந் துமிச்சத்தந்திகுத்திச்செஞ்
ஜேகுணகிருததிந்தித தெனத்தச்செக்கிணத்திந்தித்
திகுந்திந்திகு டுகுண்டுண்டுகு
டிகுண்டிண்டென முழவகுந்தொனி
மீதிற்பஞேசைக்கோ டுரத்திலேதிசகு
வெளிபுவிகிடுகிடு கிடென
வாரணமெனவந்தந்தங் கெதிர்க்கக்கண்டிடிக்கொப்பென்
றேஜெயமுறவுந்தங்கந் துகத்திற்சிங்கமொத்துச்சென்
றடந்தங்கவர் சிரங்கண்டமு
முரந்துண்டொடு விழுந்தங்கமும்
வீழக்கைவாள்வெற்றி யாலிக்கமாகித்தன்
மகிழவரமுறுநவமுள கருணேசர்
அமரரரசர்கள்பரவு சரணினேர். ()

மாதுளபணசங்கந்தம் புனேக்கொக்கின்றிரட்கொத்தின்
றுதகில்மகிழுஞ்சந்தந் தனிப்புட்பம்பழத்தைததின்
றெழுந்துங்கவி யினஞ்சென்றதி
விழிநதுஞ்சுரை விழுநதெண்டிசை
வாரிச்சொல்போதிப்ப ஞைகத்தின்மாணிக்கம்
விளைகழைகளை மணியெனசதிர்வீசு
தேனதிசெலமுன்பின்சுங் கினத்தைக்கண்டகத்தைச்சந்
தானுருமயிம்சென்றண்டம் பொழிற்கொப்பின்பெலத்தைச்சிந்
தடர்ந்துமபுயல் நுழைந்துநதுளி
சொரிந்தங்கதி றைடுந்தங்கிட
வானுற்றுலாவச்ச சிம்பால்சிந்தநீர்கொட்டு
வளமிகவளர்மது வயலிடையோடி
வானளவுயரும்பொன்செஞ் செநெற்கொப்பின்றிலேததிக்கந்
சோடிடைதிழலின்றங்கும் டடிக்குததம்புரைக்கிச்செக்
கரந்தங்கிய வாம்பொங்கிய
தவந்தின்புகழ் விளங்குந்திரு
மாமக்கவாழ்வுற்ற கோவபதுல்லாபுத்ர
ரெனுமகுமதுமுகம் மதுபகுழூதர்
அரசுபுரிசுவனவரையரிவையார். ()

முற்றிற்று.

# தாயுமான சுவாமிகள் வண்ணம்.

அருவென் பனவுமன்றி உருவென் பனவுமன்றி
அகமும் புறமுமன்றி—முறைபிற ழாது
குறியுங் குணமுமன்றி நிறைவுங் குறைவுமன்றி
மறையொன் றெனவிளம்ப விமலம தாகி
அசலம் பெறவுயர்ந்து விபுலம்பெற வநர்ந்து
சபலஞ் சபலமென்று—ளறிவினர் காண
—ஞானவெளியிடைமேவுமுயிராய். ()

அனலொன் றிடவெரிந்து புகைமண் டிடுவதன்று
புனலொன் றிடனமிழ்ந்து—மடிவில தாதை
சருவும் பொழுதுயர்ந்து சலனம் படுவதன்று
சவர்கொண் டழிவதன்றொ—ரியல்பினதாகும்
அவனென் பதுவுமன்றி அவளென் பதுவுமன்றி
அதுவென் பதுவுமன்றி—யெழில்கொ டுலாவும்
—ஆருநிலையறியாதபடியே. ()

இருளென் பதுவுமன்றி யொளியென்பதுவுமன்றி
எவையுந் தனுளடங்க—வொருமுத லாகும்
உளதென் பதுவுமன்றி யிலதென் பதுவுமன்றி
உலகந் தொழவிருந்த—வயன்முத லோர்கள்
எவருங் கவலைகொண்டு சமயங்களில் விருந்து
சுழலும் பொழுதிரங்கி—யருள்செயு மாறு
—கூறரியசகமாயையறவே ()

எனதென் பதையிகழ்ந்த வறிவின் றிரளினின்று
மறிவொன்றெனவிளங்கு—முபயம தாக
அறியுந் தரமுமன்று பிறியுந் தரமுமன்று
அரசரஞ் சரமிரண்டி—னொருபடி யாகி
எதுசந்ததநிறைந்த தெதுசிந் தனையிறந்த
தெதுமங் களசுபங்கொள்—சுகவடிவாகும்
—யாதுபரமதைநாடியறிநீ. ()

பருவங் குலவுகின்ற மடமங் கையர்தொடங்கு
கபடந் தனில்விழுந்து—கெடுநினைவாகி

வலையின் புடைமறிந்த மறியென் றவசமுண்டு
வசளந் திமுமின்றி—யவரித மூறல்
பருகுந் தொழிலிணங்கி யிரவும் பகலுமின் சொல்
பகரும் படிதுணிந்து—குழலழ காக
—மாலைவகை பலசூடியுடனே. ()

பதுமந் தனையிசைந்த முலையென் றதையுகந்து
வரிவண் டெனவுழன்று—கலிலென வாடுஞ்
சிறுகிண் கிணிசிலம்பு புனைதண் டைகண்முழங்கும்
ஒலிநன் றெமகிழ்ந்து—செவிகொள நாசி
பசுமஞ் சளின்வியந்து மணமுந் திடமுகந்து
பவமிஞ் சிடவிறைஞ்சி—வரிசையி னூடு
—காலின்மிசைமுடிசூடிமயலாய். ()

மருளுந் தெருளும் வந்து கதியென் பதைமறந்து
மதனன் சலதிபொங்க—விரணம தான
அளிபுண் டனைவளைந்து விரல்கொண் டுறவளைந்து
சுரதஞ் சுகமிதென்று—பரவச மாகி
மருவுந் தொழின்மிகுந்து தினமுந் தினமும்விஞ்சி
வளரும் பிறைகுறைந்த—படிமதி சோர
—வானரமதெனமேனிதிரையாய். ()

வயதும் படவெழுந்து பிணியுந் திமிதிமென்று
வரவுஞ் செயலழிந்து—ளிருமலுமாகி
அனமுஞ் செலுதலின்றி விழியுஞ் சுடர்களின்று
முகமுங் களைகளின்று சரியென நாடி
மனையின் புறவிருந்த வினமுங் குலைகுலைந்து
கலகஞ்செய விருண்ட—யமன்வரும் வேளை
—வதுணைபழிகாரமனமே.

# பெரிய வண்ணத்திரட்டு

முற்றிற்று.

## பார்ஸீ நூதன இந்துஸ்தான்

# மனமோகன வள்ளியம்மை பரதம்

நாடகப்பிரிய நண்பர்களே! கவனிப்பீர்களாக, இதுவரை வெ
பட்டுள்ள டிராமா சரித்திரங்கள் எவ்வளவோ பார்த்திருப்பீர்க
அவைகளைப்போலல்லாது இது மான்வயற்றில் வள்ளியம்மை ஜெ
த்து நம்பிராஜன் கிரஹத்தில் வளர்ந்து தக்கபருவதிசையடைந்
உனஞ்சென்று பக்ஷிசாதிகள் செந்தினைக்கதிரைக்கொய்யாது பர
மீதமர்ந்து காவல்புரிந்து நாரதமாமுனிவரோடு வாதுகூறி அம்மு
வரால் சுப்பிரமணியக்கடவுள் தெரிந்து வேடவவுருக்கொண்டு வ
அன்னவரோடு வாது பேசி வளையல்செட்டியோடு தர்க்கம் புரிந்
பண்டாரக்கிழவரோடு மனமகிழ்ந்து பரண்மீதிருந்து அன்னவரு
குத் தொண்டுசெய்து சுனையையடுத்து யானையாற் சிவசுப்பிரமணி
ரைக் காந்தர்வ விவாஹம்புரிந்து தினைக்கதிருந்து சகிமாதோ
சிற்றூர்சென்று குகனை நினைந்து சோகித்து பின்னர் சிவசுப்பிரமண
யரைப் பாணிக்கிரகணஞ்செய்து களிகூர்ந்து செல்லுதல்

இப்பாகங்களில் சிருங்காரம், வீரம், சோகம் என்ற பாகங்க
மூன்றும் ஒருங்கே அடங்கியுள்ளது. ஆனால் ஒவ்வொருபாகங்களி
சமயத்துக்கேற்ப, இந்துஸ்தான், பார்ஸி, கெஜல், டோயரி, லில
ஞ, டப்பா முதலிய [illegible]காலத்தில் வழங்கிவரும் நவரசமான கீ
வர்ணமெட்டுகளா லமைத்த தருக்கள் ஏராளமாக அடங்கியுள்ள
புத்தகத்தை வாங்கி வாசிக்கும் நேயர்களும் கேட்கும் நண்பர்களு
உற்சாகத்தையும் ஆனந்தத்தையும் அடைவார்களென்பது திண்ண

இப்புத்தகம் மதுரபாலகவி வீ.பி.எம். இராமசிங்கம் என். ஆர்
அவர்களால் இயற்றப்பெற்று சிறந்தபடங்களுடன் அச்சிட்டு சொற்
காப்பிகளே தயாரிலிருக்கிறது புத்தகம் வேண்டும் நண்பர்கள் கீழ்
கண்ட எமதுவிலாசத்திற்கெழுதிப் பெற்றுக்கொள்ளலாம்.

புத்தகம் போன் கிலிட் காலிக்கோ பைண்டு விலை ரூ 1—0—0.
ஷை ஆப்பைண்டு ... விலை ரூ 0-12—0

மூக்கவேளாரவர்கள் நூதனவர்ணமெட்டு டிராமா
சரித்திரங்கள் 12-ம் ஒரே கட்டிடம். விலை ரூ 1.

☞ தேவதாசித்தி யென்னும் மலையாளமாந்திரீக
ரத்னாகரம் எட்டுபாகமும் ஒரேகட்டடம். விலை ரூ 1.

மதுரபாலகவி வீ பி எம். இராமசிங்கம் என் ஆர். அவர்களால்
இயற்றிய சிவசுப்பிரமணியக்கடவுள்மீது பார்ஸி நூதன இந்துஸ்தான்
பஜனைக்கீர்த்தனை கூடியசீக்கிரத்தில் வெளிவரும். விலை அணா-2.

எமது விலாசம்.

எஸ். பொன்னையா பிள்ளை,
ஸ்ரீ தேவி விலாஸ புத்தகசாலை,
தையல்காரத்தெரு, மதுரை